தனவைசிய ஊழியன்

மலர் 2, இதழ் 13

December 02, 1921

Record no. 148

*Ta<u>n</u>avaiciya ū<u>l</u>iya<u>n</u>*
*Malar 2, ita<u>l</u> 13*
*December 02, 1921*

Record no. 148

உ
சிவமயம்.

தந் திவிலாசம்—"Oolian" Regd No. M. 1509. "Dhana Vysia Oolian,"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௨. காரைக்குடி துன்மதி௵ கார்த்திகைமீ ௧௭உ (௨—௧௨—௧௯௨௧) இதழ் ௧௬

## சுவதந்திரம்.

உலகத்திலேயுள்ள ஒவ்வொரு மனிதனும் இம்மையில் தான் செய்துகொள்ள வேண்டிய கடமைகளைச்செய்து சுகத்தை அடைவதற்கும் கடவுளுடைய கிருபையினால் தனக்குக் கிடைத்திருக்கும் புத்தியாதிகளைக் கொண்டு நன்னிலைமை அடைதற்கும் தன் புத்தி உடல் உறுப்புகள் முதலியவற்றைத் தடையின்றிப்பலவிதமான தொழில்களிற் செலுத்தும் வல்லமைகள் அத்தியாவசியகமாயிருக்கின்றன.

நாகரீக மடைந்த எந்தச் சாதியாரிலும மேற் கூறிய இலக்கணத்தையுடைய வல்லமைகள் அவருள் ஒவ்வொருவருக்கும் உண்டென்று அரசுரிமை முறைமையினால் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றது சுவய நலம் கருதி உழைக்கும் அதிகாரிகள் குடிகள் ஒவ்வொருவரின் செய்கைகள் எல்லாவற்றையும் தனித் தனியே கவனித்து அவர்களை நன்னிலைமைப் படுத்துவது ஒருபோதுங் கூடாது. ஆகையால் பலவிஷயங்களில் ஜனங்கள் ஒருவிதக்கட்டுப்பாடும் இல்லாது சுயேச்சையாய் உழைத்து வருதல் வேண்டும். அப்படி நடந்துவருதல் தற்காலத்தில் நற்குணப் பயிற்சிக்கு ஆவசியகமாக விருக்கின்றது. தொடங்குகின்ற காரியங்களை முடிக்த முப யத்துடன் தடையின்றிச் செய்யும் சக்திக்கும் யோக்கியதைக்கும் சுவதந்திரம் என்று பெயர்.

மனிதருக்குச் சுவதந்திரங்களுண்டென்று உலகம் முழுவதும் உள்ள நாகரீகமடைந்த கூட்டத்தார்களால் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றது. மனிதரியல்பும், மனிதற்கு இம்மையிலே சீவனஞ்செய்தற்கு வேண்டியதா யிருக்கிற ஆவசியகங்களும்இத்தன்மையாகிய ஆவசியகத்தோடும் நம்மைப் படைத்திருக்குங் கடவுளுடைய கருத்தும் இதற்குத் தகுந்த காரணங்களாகின்றன. ஆதலால்இக்காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் நமக்குச் சுவதந்திரம் உண்டென்பதற்கும் தகுந்த காரணங்களிருக்க வேண்டும் என்பதைக் குறித்துச் சிறிதும் சந்தேகமேயில்லை.

ஊண் உடை உறைவிடம் முதலியவை மனிதரின் பொதுவான சுபாவத்திற் குரியவை யாதலால் அத்தகைய மனிதர்பொருள்களில் சுவதந்திரத்தைக் கொண்டாடுகின்றார்கள்: அச்சுபாவம் மாறி ஊண் உடை முதலியவைகளை விரும்பும் அவா நீங்கினால் இது தம்முடைய பொருள் என்றும் இது பிறர் பொருள் என்றும் தாரதம்மியம் அற்றுப் போகும். ஒவ்வொரு மனிதனும் வெவ்வேறாய்த் தனித்துப் பிறருடைய கட்டுப்பாட்டுக்குளமைந்து சீவித்து வந்தால் சுவதந்திரம் சிறிதேனும் இருக்கமாட்டாதென்பது உறுதி. சுவதந்திரத்தைப் பற்றி முன் கூறிய சித்தாந்தமானது பலர் கூடி வாழும் மனித சுவபாவத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றது. எல்லா மனிதருக்கும் சகவாசமும் பொதுவான எண்ணங்களும் விருப்பங்களும் இயல்பாகவே அமைந்திருத்தலினால் தங்களுக்குள்ளே சமாதானத்தோடும் சுகத்தோடும் துன்பத்தை விளைவிக்கும் வீணான தடைகள் இல்லாமலும் வாழுதற்கு வெளிப்படையாக விளங்கும்சுவதந்திரங்கள் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதன வென்பது நன்கு விளங்குகின்றது.

எந்தக் கூட்டத்தாரிடத்தில் சுவதந்திரமென்னுமாயுதம் இல்லையோ அங்கே கூடிச் சுகித்து வாழுகின்ற வாழ்வும் நிலைக்க மாட்டாது. சகவாசம் மனிதருக்கு இயற்கையாதலால் அவ்வியற்கையைச்செய்கையில் கொண்டுவந்து காட்டுவதற்கும் அதனால் இம்மை மறுமைகளிற் சித்திக்கும் சுபானுபவத்திற்கும் மனிதருக்குச்சுவதந்திரம் வேண்டு மென்பதும் அதற்கு அனேக நிர்ப்பந்தங்களுண்டென்பதும் பெறப் படுகின்றது.

சுவதந்திரத்தை விரும்பும் ஒவ்வொரு மனிதரும் இடைவிடாமல் ஒற்றுமைப்பட்டு உழைத்து வருதல் வேண்டும். சுயேச்சை அற்ற வாழ்வு தாழ்வே யன்றி வாழ்வென்று ஒரு அறிஞனு மொப்பமாட்டான். நமக்கு அடிமைத் தன்மை எதனாலுண்டாயிருக்கிறது? அதை நீக்கும் உபாயம் யாது? எப்போது அதினின்று நீங்குவோம்? என்று அல்லும் பகலும் இடைவிடாது சிந்தித்து நீக்க முயலாதவன்ஒரு போதும் சுவதந்திரத்தை அடைய மாட்டான்.

சு. இரத்தினசாமிஐயர்
ஆசிரியன்
பொன்னம்பல வித்தியாசாலை
கொழும்பு.

## விஷய தானம் புரியும் நண்பர்களுக்கு எனது அபிப்பிராயம்.

சகோதரர்களே!

நாம் ஓர் பத்திரிகைக்கோ சஞ்சிகைக்கோ ஓர் விஷயத்தை எழுத விரும்பினால் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு நம்மாலியன்றவரைப் போதியசான்றுகள் எடுத்துக்காட்டி விஷயத்தைஒருவாறாகப் பூர்த்திசெய்யவேண்டும். அப்படிக்கின்றி பிற பத்திரிகையிலோ சஞ்சிகையிலோ மற்றெந்தப் புத்தகங்களிலோ கண்டவிஷயத்தை ஒரு பத்திரிகைக்குப் பூராவும் காப்பிசெய்தெழுதிவிடுதல் அத்தனை அழகல்ல. ஆனால் அறிவாளிகள் எழுதிவரும் பலவிஷயங்களைப்பன்னாள் வாசித்து வருவோமாயின் சிறிது சிறிதாக நாமே யெழுத ஆரம்பித்துவிடலாம். என்றாலும் "நூலளவேயாகுமாம் நுண்ணறிவு" என்பதுபோல, நாம் வாசித்த அளவே நம்மறிவும் விசாலிக்கும் என்பது திண்ணம். ஒரு பத்திரிகையிலோ சஞ்சிகையிலோ புத்தகங்களிலோ கண்ட ஒரு விஷயத்தை ஒரு பத்திரிகைக்கு எழுதவேண்டிய அவசியம் நேர்ந்தால் அவ்விஷயம் தோன்றிய விடத்தைக் குறிப்பிட்டெழுதுதல் வேண்டும். இலையேல் பத்திரிகை வாசிப்போருக்கு மற்றோரிடத்தில் கண்ட ஒரு விஷயத்தை வாசிக்கச் சிறிது அசட்டையாகத் தோன்றும். நான் இவ் விஷயத்தை எழுத ஆரம்பித்ததின் காரணம் யாதெனில், நண்பரொருவர் "ஆனந்த போதினி" ௪ம் தொகுதி ௩௭ம் பக்கத்திற் கண்ட "கோபம்" என்ற விஷயத்

தைப்பார்த்து நமது "ஊழியனுக்கு" எழுதிய அஃது இம்மதி மூன்றும் தெய்திப் பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது. ஆனால் நண்பர் "ஆனந்தபோதினி"யில் கண்ட விஷயத்தை நமது நண்பர்களுக்காக அங்கு எடுத்து எழுதப்பட்டது என்று குறிப்பிட்டிருப்பரேல் மிகப்பொருத்தமாயிருக்கும். நமது ஊழியன் ஒரு பத்திரிகையில்கண்டவிஷயத்தையோஒரு விஷயத்தை இரண்டுபததிரிகைக்கோஎழுதாதிருக்கும்படி முன்னரே எச்சரிக்கை செய்திருந்தும் நமது நண்பர் செய்தது அத்தனை பொருத்தமுடைத்தன்று என்பதுதான் எனது சிற்றறிவிற்கெட்டியஅபிப்பிராயம். இனியாகிலும் இத்யாதி வியாசங்கள் எழுதாதிருக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறது

அ. சிதம்பரஞ்செட்டியார்.
கீழச்சிவற்பட்டி.

## பஞ்சாக்ஷர உபதேசம்.

சிவபக்தியிற் சிறந்த செல்வர்காள்! நம் பெருமானாகிய பரமேஸ்வரருடைய திவ்விய மந்திரமாகிய பஞ்சாக்ஷரத்தின் மகிமையையும் அவ்வுபதேசம் கேட்க வேண்டிய முறைமையையும் நன்கு தெரிந்துகொண்டு,நாம் இப்பொழுது அவ்வுபதேசம் கேட்டுவருகிற தவறான முறையை அடியோடு நீக்கி எதற்கும் பழயவழக்கம் பழயவழக்கம் என்பதை மறந்து ஒவ்வொரு பெரியோர்களும் சீர்திருத்தவேண்டுமோய்க்கேட்டுக்கொள்வதுடன் நமது பிறவிப்பிணியை நீக்கி இருமை இன்பத்தையும் தரக்கூடிய பஞ்சாக்ஷரத்தின் பெருமையைச் சிறிது ஆசைமேலீட்டினாற் சொல்ல விரும்புகிறேன்.

இப்பஞ்சாக்ஷரமானது, மூன்றுவேதங்களுக்கும் நடுவே உள்ள எஜுர்வேதத்திலே நடுக்காண்டமாகிய ச-ம் காண்டத்தில் ஸ்ரீருத்திரத்தின் நடுவில் வேதங்களுக்கெல்லாம் ஜீவாதாரமாக விளங்கிக் கொண்டிருக்கும் பெருமை வாய்ந்தது. மேலும் நமது சுத்தமாகிய இருதயத்திலே விளங்கிக் கொண்டிருக்கின்ற பரமேஸ்வரனை நாமே அறிய முடியா வண்ணம் மறைத்துக்கொண்டிருக்கின்ற ஆணவமலத்தை அடியோடுநீக்கி அப்பரமேஸ்வரனை அறிந்தின்புறுவதற்கோர் பெரிய சாதனமுமாகும். இன்னும் நமது தமிழ்வேதமாகிய தேவாரத்தில் "தும்மலிருமலொடர்ந்த போழ்தினும், வெம்மை நரகம் விளைந்த போழ்தினு, மிம்மை வினையடாதெய்துபோழ்தினு, மம்மையினுந் துணையஞ்செழுத்துமே" என்ற பாசுரத்தாலும், "வேதநான்கினும் மெய்ப் பொருளாவது நாதனாம நமச்சிவாயவே, கற்றுணைப்பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே" என்ற பிரபல வாக்கியங்களாலும் நன்கு விளங்குகின்றன. மேலும் இப்பஞ்சாக்ஷர உபதேசம்பெற்று சிவாலயாதிகளுக்குச்சென்று திருத்தொண்டுசெய்து தேவார திருவாசகாதிகளைக்கேட்க வேண்டுமென்பது "திருவருள் சேர்குருவருளாற் சிவசமயப் பிரவேசத், திருவருளுந்தீக்கை பெறீஇச்சிவாலயாதியிற புகுந்து, திருவலகு திருமெழுக்குத் திருவிளக்குத் திருமாலை, திருவருட்பாச்சிரவணமுற் செய்தவத்தோர்" என்ற பெரியாருடைய திருவாக்காலும் நன்கு விளங்குகின்றன. ஆகையால் எனதுதனவைசிய சிரேஷ்டர்களே! இவ்வளவு மகிமைவாய்ந்த பஞ்சாக்ஷரத்தை சாஸ்திரமுறைப்படி கேட்கவேண்டியது அவசியமே என்று எல்லோரும் ஒப்புக்கொள்வதுடன் சாஸ்திரமுறைப்படி செய்யவும் முன்வருவீர்களாகையால் அம்முறையையும் அதில் செய்யும் தவறையும் சிறிது சொல்லவிரும்புகிறேன்.

க. உபதேசமானது ஆடம்பரமில்லாது அமைதியுடன் ஒருமனப்பட்டுக்கேட்க வேண்டியது. இதை நாம் உ0000, ௩0000என்றுசெலவழித்துக்கும்பலில் கோவிந்தா என்பது போல மறுநாள் முன்கேட்ட பெரியோர்களிடம் மந்திரத்தைஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டிய நிலையிற் கேட்டு வருகிறோம். அந்தோ பாவம்!

உ. இப்பஞ்சாக்ஷர உபதேசம் கேட்க வேண்டிய காலம் வைசியர்களாகிய நமக்குப் பிறந்தவழாவதுவயதேயாகும். நம் ஜாதியிலோ ௫0 வயது வரையினும்கூடச் சிலர் உபதேசமில்லாதிருக்கின்றனர். அந்தோ பரிதாபம்!

௩. நமது குருசாமிகளிருக்கும் இடத்திற்கு நாம் போய் உபதேசம் கேட்க வேண்டும். இதிலும் தவறே செய்கின்றோம்.

௪. ஒரு ஹோம குண்டத்தில் ஒருவரே உபதேசம் கேட்க வேண்டும். நாமோ ஆயிரம் பேர் வரையிலும் கேட்டு வருகிறோம்.

௫. கல்யாணமான பிறகு தான் உபதேசம் கேட்கவேண்டுமென்பது கிடையாதென்பது பிறந்த வழாமாண்டிலேஉபதேசங்கேட்க வேண்டுமென்பதினாலேயேநன்கு விளங்கும். ஆகையால்எனது பெரியோர்களே!கல்யாணமாகித் தான் உபதேசம் கேட்க வேண்டுமென்றும் கல்யாணமாகியும் நாமாக உபதேசங் கேட்கலாமாவென்றும்சாஸ்திர விரோதமான வழக்கங்களை யோஜியாமல், "இன்றைக் கிருப்போரை நாளைக்கிருப்பரென்று எண்ணவோ திடமில்லையே" என்ற பெரியோரின் திருவாக்கையே யோஜித்து சாஸ்திர முறைப்படி பிறந்த வழாமாண்டிலேயே ஒவ்வொரு சகோதர சகோதரிகளையும், மேற்கண்ட மகிமைகளெல்லாம் பொருந்திய இப்பிறவியின் பயனாகியமோக்ஷத்தைத்தரத்தக்கநமது மரபிற்குரிய பஞ்சாக்ஷர உபதேசத்தை நமதுகுருசுவாமிகள் வீற்றிருந்தருளும் கிளாமடம், பாதரக்குடி, துலாவூர்முதலியஇடங்கட்குச்சென்றுகேட்டுய்யுமாறு கேட்டுக்கொள்வதோடுஇவ்விஷயத்தில் ஒவ்வொரு பெரியோர்களும் முன்வருமாறுஅருள்புரியும்படியும் நமது குலதெய்வமாகிய மரகதவிநாயகரைப் பிரார்த்திக்கிறேன்.

சேவு மெ. மெய்யப்பன்,
சாரைக்குடி

## சமூக ஒற்றுமை.

பண்டைக் காலத்து நம் சமூகம் எவ்வளவு ஒற்றுமையுடனிருந்ததென்பதை யாருமறிவர். ஊரொற்றுமை வட்டகை ஒற்றுமை கோவில் வாசலொற்றுமை மடத்துவாசலொற்றுமை தொண்ணூற்றூர் ஒற்றுமை முதலான பல ஒற்றுமைகள் ததும்பி நின்றன. அக்காலத்து நம்மவர் இத்தகைய ஒற்றுமையாலன்றோ தம்முயிரையும் தியாகஞ்செய்து பெறுதற்கரிய சிறப்புப்பெற்றிருந்தனர். வரவர ஒற்றுமை குன்றவே நம் சமூகத்தினர் பலவழிகளிலும் ஏளனமாய் மதிக்கப்படுகின்றனர். இப்பொழுது நம்மவரில் ஒற்றுமையில்லையெனறே இயம்பலாம். முன் காலத்து ஒற்றுமையால் பஞ்சாயத்துச் சபைமுதலியவற்றை உண்டாக்கி ஒருவர்க்கொருவர் மீது உண்டாகும் வழக்குகளை அவ்வப்போது ஒழித்து வந்தனர். தற்காலம் ஒற்றுமையின்மையால் அச்சபையும் போக துரைத்தன அதிகாரிகள் நியாயஸ்தல மூலமாக சமூகப் பொருள்களையெல்லாம் சூறையாடுகின்றனர். இது போதாதென்று இன்னும் பல நியாயஸ்தலம கட்டவேண்டுமென்கின்றனர். ஐயா! ஏன் இவ்வாறு கூறுகிறீர்?என்றால் "எல்லாம் நும்மவருக்காகத்தான்" என்றுஇகழுகிறார். இவற்றிற்கெல்லாம்காரணம் ஒற்றுமையின்மையே. ஆனால் இப்போது நம் சமூகத்தில் ஒற்றுமை தலைகாட்ட ஆரம்பித்துவிட்டது. இதற்கு அறுபது ஆண்டுகளாக் கூடாதிருந்த தொண்ணூற்றூர்க்கூட்டம் கூடிச் சில தீர்மானம்- சமூகத் தீர்மானம் செய்ததையே சான்று பகரலாம். இத்தீர்மானங்களிலிருந்து சிலர் பிறழப் பார்ப்பார். இதற்காகவே ஒவ்வோரூர்களிலும் வாலிபர் சங்கம் ஏற்பட்டிருக்கிறது. இச்சங்கங்கள் தீர்மானத்துக்கு மாறுவோரை மாறவிடாமல் நம் சமூகத்தினரனைவரையும் ஒற்றுமைப் படுத்துமாறு வேண்டுகிறேன்.

நா. சொ. சோமசுந்தரம்,
திருவள்ளுவர் வாசக சாலை
உப காரியதரிசி
வேந்தன்பட்டி.



## வேண்டுகோள்.

### நெற்குப்பை தனவைசிய சிகாமணிகளுக்கு.

நம் தனவைசிய ஊழியன் மூலமாகப் பல ஊர்களிலும் சீர் திருத்தத் தீர்மானங்கள் வாலிபர்சங்கம் மற்றும் சிலகட்டுப்பாடுகளும் செய்து அதன்படி நடத்திவருவதை நாம் அறிந்திருக்கிறோம். நம் நெற்குப்பையிலோ அம்மாதிரியான ஒருவிதக் கட்டுப்பாடும் செய்திருப்பதாகத் தெரியவில்லை. இனிமேலாவது நமது அன்பார்ந்த நகரத்தார்கள், தங்கள் சொந்த விஷயங்களிலோ அல்லது பிறவிஷயங்களிலோ நம் சகோதரர்களுக்குள் ஏதேனும் கக்ஷிபேதங்களிருப்பினும் சுய நலங்கருதுதலே பெரிதென்றெண்ணாமல், கக்ஷிபேதங்களை அறவேயொழித்துப்பரோபகார சிந்தையையும் நம் சமூக வளர்ச்சியையுமே பெரிதாகமதித்து ஒவ்வொரு ஜாதியபிமானிகளும் கூடிய சீக்கிரம் முயற்சித்து வாலிபர் சங்கம் சமூக சீர்திருத்தத் தீர்மானங்கள் மற்றும் சில கட்டுப்பாடுகளும் ஏற்படுத்தி முன்னேற்றத்திற்குக்கொண்டுவர வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இம்மாதம் நடைபெறவேண்டிய நமது ஷண்முகவிலாச வாசகசாலையின் இரண்டாவது ஆண்டு நிறைவுவிழா, இப்போது மழைகாலமானதால் நாலாபக்கங்களிலும் வெள்ளமிகுதியானதாலும் அரிய உபந்யாசர்களும பல அன்பர்களும்வர சிறிது சிரமமேற்படுமோ,தலாலும் பல அசௌகர்யங்களை முன்னிட்டு, வருகிற சித்திரை மாதத்தில் பல அரிய பெரிய உபந்யாசர்களை வரவழைத்து, நம் சகோதரர்களுக்கும் பல அன்பர்களுக்கும் மிகுந்த ஸௌகர்யமாகவும், வெகு சிறப்பாகவும், நந்தாய்ப்பாஷையாம் இனிய தமிழ்மொழி செழித்தோங்கவும், நம் சமூக வளர்ச்சியையும் ஜாதியபிமானத்தையும் ஒற்றுமையையும் கருதிய பல விஷயங்களோடு எம்பெருமானாகிய ஷண்முகப்பெருமானது திருவருளால் நடைபெறுமானதால்,நம்வாலிப சகோதரர்களும் அங்கத்தினர்களும் இவ்வருடக்கொண்டாட்டம்நடைபெறவில்லையென்று மனச்சோர்வடையாமல் இதுவரை ஆதரித்து வந்ததுபோல் இன்னும் மிக ஊக்கத்துடன் நன்கு ஆதரித்து, சங்கமுகமாக நம்மக்களுக்கு நல்லறிவுச் சுடர்கொளுத்துமாறு வேண்டுகிறேன். இனி வருடந்தோறும் சித்திரை மாதத்திலேயே நம் சங்க நிறைவு விழாவும் பூர்த்தியாகி நன்மை பயக்குமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

பழ. அண்ணாமலை
கொழும்பு.

## சிங்கப்பூர் நகரத்தாருக்கு.

எப்பூமியினும் மேன்மை தங்கிய நம் பூமியாகிய இந்தியாவில் எத்தனையோ பிறமதங்களெல்லாம வந்து பரவியும் அம்மதங்களையெல்லாம் பொருட்படுத்தாமல் சிகரம்போல் விளங்குவது நம் இந்துமதம். இப்படி நம்மதம் விளங்குவதற்குக் காரணம் நம்மத ஸ்தாபனர்களின் வலிமையும் எம்மதமும் சம்மதமென்ற கொள்கையுமேயாகும். நம்தென்னாட்டில் நம் நகர வைசிய சிகாமணிகள் செய்த மதஸ்தாபனங்கள் எவ்வளவோ உள. எந்த விஷயத்திலும் நம் தனவைசிய பிரபுக்கள் ஒற்றுமையோடு நடந்துகொள்வது சாலவும் மெச்சத்தக்கது. நம் சனாதன தர்மமோ ஒவ்வொரு மனிதனும் சுதந்திரத்தோடு வாழவேண்டுமென்றும் ஒவ்வொரு விருப்பும் நற்பலனை யடைய வேண்டுமென்றும் எல்லாரும் சமத்துவமாய் பரபிர்ம சொரூபியின் வரம்புகளை மீறி நடவாமலிருக்கும்படிகோருகின்றது. நம்நாட்டிலொவ்வொருவரும்வரம்புமீறிநடவாமல்சுயராஜ்யம்பெற்றுசுகவாழ்வு வாழவேண்டுமென்றுஎத்தனையோபுண்ணியவான்கள்உடல்பொருள் ஆவிமூன்றையும்தத்தம்செய்துநமக்குள் உள்ள பேதாபேதங்களைநாமே தீர்த்துக் கொள்ளவேண்டுமென்று சொல்லிஊருக்கு ஊர் பஞ்சாயத்து சபைகள் ஏற்படுத்தி எவ்வளவோ நன்மையைச் செய்து கொண்டு வருகிற இக்காலத்தில், சிங்கப்பூர் நகரத்தார்கள் ஏதோ சிவசிறுகாரியத்தை முன்னிட்டு மன பேதமுற்று இரண்டு கட்சிகளாய்ப் பிரிந்துகொண்டு பொது விஷயங்களில் சச்சரவு உண்டுபண்ணி வருவதைப் பார்க்க என்போன்ற பாமர ஜனங்களுக்கு வருத்தத்தைத் தருகின்றது. இவ்வூரில்தெண்டாயுதபாணி கோவில் ஏற்பட்டு எவ்வளவோ காலமாய் கார்த்திகைப் பூஜையன்று எத்தனையோ ஏழைகளுக்கு அன்னம் அளித்துக் கொண்டு வந்தார்கள். அதையும் கட்சிபேதத்தால் நிறுத்திவிட்டபடியால் அன்று ஏழைகள் பட்ட கஷ்டம் சொல்ல முடியாது. மகார் நோன்புக்கு ஸ்ரீ தெண்டாயுதபாணி திருவீதியில் எழுந்தருளி வருங்காலத்தில் ஒரு கட்சியார் எம்பெருமானுக்கு நைவேத்தியம் முதலானது செய்யக்கூடாதென்றுநிறுத்திவிட்டது பெரிதும்விசனிக்கத்தக்கது. எம்பெருமானின் தருமகாரியங்களில் இப்படிச்செய்வதைப்பார்க்க என் கண்ணில் தண்ணீர்ஆறாய்ப்பெருகிக் கொண்டிருக்கிறது. எம்பெருமான் தருமகாரியத்தையே மேற்கொண்டிருக்கிற நம் வைசிய சிகாமணிகள் குற்றங்களைக்களைந்து தள்ளிவிட்டுப்பிளவுபடாமல் ஒருமனப்பட்டு தரும காரியங்களைச் சிதறவிடாமல் சரிவர நடத்திப் புகழையும் பெற்று புண்ணிய லோகத்தையும் அடைய வேண்டுமென்று சாட்சாத் பரபிர்ம சொரூபி அருள் புரிவாராக.

வீ. ஆறுமுகன்

## மேலைச்சிவபுரி தனவைசிய நண்பர்களுக்கு.

நாளிது ஐப்பசிமீ கஉ நம் மேலைச்சிவபுரியில் பொதுநலச்சங்கமென்னும் பெயரியசங்கம் ஒன்று ஸ்தாபிக்கப் பெற்றிருப்பதப்பற்றி மிரம்ப சந்தோஷம்.

நண்பர்காள்! "எழுமின் விழிமின் கருதிய கருமம் கைகூடும் வரையுழைமின் அறிமின்" என்று விவேகாநந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றபடி அச்சங்கத்தில் சேர்ந்திருக்கும் அங்கத்தினர்களும் இன்னும் அங்கத்தினராகச்சேராதிருக்கும் வாலிபர்களும் ஊக்கத்துடன் பொதுநலச்சங்கத்திற்கு வேண்டிய சாதனங்களைச் செய்தவரவேண்டுமாய்க்கேட்டுக் கொள்கிறேன்.

நிற்க,பொதுநலச் சங்கத்தில் பொது விஷயங்களைப்பற்றி அடிக்கடி நல்வழிகளை உபந்யாசிக்கவும் பெண்பால் ஆண்பாலாகிய சிறுவர் சிறுமிகளுக்கும்போதிய அளவு தாய்ப்பாஷையைக் கற்பிக்கச்செய்யும்படியான மார்க்கத்தைத் தேடவும் மற்றுமுள்ள சீர்திருத்தங்களையும் பொது நலச்சங்க மூலமாகவே சீர்திருத்தம் செய்யவும் எம்பெருமான் திருவருள் பாலிப்பாராக.

அத்துடன் சிவன்கோவில் கும்பாபிஷேகமும் கூடிய சீக்கிரம் நடைபெறுமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவார் என்றுநம்புகிறேன்.

முரு. பழனியப்பன்,
கோலக்கம்சார்

## பள்ளத்தூர் நகரத்தார்களுக்கு

இவ்வூரில் புதுச் சிவன்கோவில் உண்டாகி கும்பாபிஷேகம் நடந்தபிற்பாடு இவ்வூரிருக்கிற நிலைமையும், அதற்கு முன்னிருந்த நிலைமையும் நகரத்தார் யாவருக்கும் தெரிந்த விஷயந்தான். தெரிந்திருந்தும் இதற்கு முன்னொருமுறை நான் இதைப் பற்றி எழுதியிருந்தும் திருவிழாச் சங்கதியைப் பேசிமுடியாதிருப்பது விசனிக்கத்தக்கது. ஆகையால் இதைப்பற்றி எல்லோரும் சிரத்தை கொண்டு இதில் யாதொரு வியவகாரமுமில்லாது திருவிழாவை நடாத்துவீர்களென்று சதாகாலமும் கடவுளைத் தியானித்துக்கொண்டிருக்கிறேன். நானிதைப்பத்திரிகைமூலமாய் யாவருக்கும் தெரியும்படி யெழுதியதை ஒரு குற்றமாக எடுத்துக்கொள்ளாது குணமாகக்கொண்டு கூடியசீக்கிரம் திருவிழாவை ஏற்படுத்தி யென்மனதைசந்தோஷிக்கும்படி செய்வீர்களென்று அதிக ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

உண்மை உரைப்போன்.

## தமிழ்நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகக்கூட்டம்.

திருசிராப்பள்ளிச் சத்திரத்தில் நாளிது நவம்பர் மாதம் உ௦ தேதி புதிய தமிழ் நாட்டுக்காங்கிரஸ் நிர்வாக அங்கத்தினர்களின் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீமாந் எம். வி. சுப்பிரமணிய சாஸ்திரியார் அக்கிராசனராக இருந்தார்.

ஏற்கனவே காங்கிரஸ் பொதுஜனக்கூட்டத்தில் வேலையில்லாமலிருக்கிற மில்தொழிலாளர்களுக்காக ஏற்பாடு செய்திருக்கிற ரூ. கரு000 க்கு சுப்பிரமணியசாஸ்திரிகள் பேருக்கு ஒரு செக் கொடுத்து மேற்படி தொகையைப் பொது ஜனக் கூட்டத்தின் தீர்மானப்படி நியமிக்கப்பட்டிருக்கிற கமிட்டியின் அபிப்பிராயத்திற்கு இணங்க, கூடுமான சீக்கிரத்தில் செலவு செய்ய ஏற்பாடு செய்யும்படி கேட்டுக்கொள்ளப்படவேண்டுமென்று ஸ்ரீமாந் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களால் பிரரேபிக்கப்பெற்று, ஒ. இராமஸ்வாமி ரெட்டியார் அவர்களால் ஆமோதிக்கப்பெற்று ஸ்ரீமாந் சிங்காரவேலுச் செட்டியாரவர்கள் நீங்கலாக மற்றவர்களால் அங்கீகரிக்கப்பெற்று தீர்மானம் நிறைவெய்தியது.

அங்கத்தினர்களின் சௌகரியங்களை அனுசரித்து வெவ்வேறு இடங்களில் மூன்று மாதத்திற்கொருதரம் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின்கூட்டம் அலுவல் சரிவர நடைபெறும் பொருட்டுகூட்டப்படவேண்டுமென்று சிங்காரவேலுச்செட்டியாரவர்களால் பிரேரேபிக்கப்பெற்று இராமஸ்வாமி நாயக்கர் அவர்களால் ஆமோதிக்கப்பெற்று விஷயம் ஓட்டுக்கு விடப்பட்டு நிறைவேறவில்லை.

காங்கிரஸ் பொது ஜனக்கூட்டத்தில் தீர்மானித்தபடி சாத்வீகச் சட்டமறுப்பு சம்பந்தமாய் அவசியமான ஏற்பாடுகள் செய்வதற்காக எம். வி. சுப்பிரமணிய சாஸ்திரியார் ச. இராஜகோபாலாச்சாரியார், சையதுமுர்த்தூசா சாகேப், இராமஸ்வாமி நாயக்கர், டாக்டர் ராஜன் ஆகிய இவர்களனைவரையும் ஒரு கமிட்டியாக நியமித்திருக்கிறார்கள்.

டி. ஆதிநாராயணச் செட்டியாரவர்கள் கள்ளிடைக்குரிச்சி சென்று அங்குள்ள தேசியக் கலாசாலையைப் பார்வையிட்டு அதன் வேலையைப்பற்றி விபரமாய்க் கூடிய சீக்கிரம் தெரிவிக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

நாளிது டிசம்பர்மீ முதல் வாரத்தில் அடுத்த நிர்வாக அங்கத்தினர்கள் கூட்டம் வேலூரிலாவது கோயம்புத்தூரிலாவது நடைபெறச் செய்வதென்று தீர்மானிக்கப் பெற்றது.

இரவு ௬ மணிக்கு சபை இனிது நிறை வெய்தியது.

௩௯-வது இந்திய தேசீய மகாசபை

## சுதேசிக் கண் காட்சிசாலை.

கண் காட்சியானது ௧௯௨௧-ஹு டிசம்பர்மீ உ௪ தேதி ஆரம்பித்து ௧௯௨௨ஹு ஜனவரிமீ ௧௦௨ வரை நடைபெறும்.

ஷை சாலையில் கண்காட்சிக்காகக் கொண்டு வந்து வைக்கப்படும் சாமான்கட்கு ஒருவிதமான கட்டணமும் கிடையாது. ஆனால் சாமான்கள் வைப்பவர்கள் சாமான்களை வைப்பதற்கு எவ்வளவு இடம் வேண்டுமென்பதையும்ஷை சாமான்களின்பெயரையும் முன்னர் அறிவித்தல் வேண்டும். காட்சியின் வகுப்புகள்:—

௧. ஆடைவகையறுக்கள்.—கையினால் நூற்று, கையினாலே நெய்யப்பெற்றதாகவும், ஷை துணிகளினுள்ள சாயமும் சுதேசமாகவும் இருப்பவைகளை அங்கீகரிக்கப்பெறும்.

உ. பொதுவாக மற்றைச் சாமான்களும் சுதேசமாகவே இருந்தல் வேண்டும். அவையாவன:—மண்பாண்டங்கள், மரச்சாமான்கள், கண்ணாடிச்சாமான்கள், கற்சாமான்கள், தோற் சாமான்கள், தந்தம், நாறு, இவைகளினால் செய்யப்பட்ட சாமான்கள், முலாம், சித்திர வேலைகள், ஆகிய இவைகள் ஒப்புக்கொள்ளப் பெறும்.

ஷை சாமான்களில்பரதேசச்சாமான்கள் சம்பந்தப்பட்டுமிருக்கலாம். ஆனால் அவைகளைக்கொண்டு வேலை செய்யும் தொழிலாளர்கள் இந்தியர்களாயிருத்தல் வேண்டும்.

கண்காட்சியில் சாமான்கள் வைப்பதற்கு விரும்புவோர்மேற்கூறியவைகளை அனுசரித்து ௧௯௨௧ஹு டிசம்பர்மீ ௧௫உத் தேதிக்குள் ஆமதாபாத்துக்கு அனுப்புவதோடு (௧) சாமான் செய்தவரின் பெயர் (உ) ஷையாரின் முழுவிலாசம் (௩) சாமான் செய்த தேதி (௪) வருஷாந்திரக் கணக்கு இவைகளோடு ஷைசாமான்கள் விற்பனைக்குரியதாவென்பதும் தெரிவிக்கவேண்டும். முதல்தரமான சாமான்கட்குப் பதக்கங்களும் நற்சாக்ஷிப்பத்திரங்களும்அளிக்கப்பெறும்.பரிசளிக்கப்பெறுகிற சாமான்கள் மகாசபையினுடைய கண்காக்ஷியின் கூட்டத்தார்களுடைய பொறுப்பில் மாதிரிக்காக வைத்துக்கொள்ளப்படும். மாதிரிக்காக வைக்கப்பட்டிருக்கிற சாமான்களைக்காட்டிலும் அதைச்சேர்ந்த சாமான்கள் கீழ்ப்பட்டவைகளாகத் தெரிந்தால், ஷை சாமான்களுக்காக அளிக்கப் பெற்ற பதக்கங்களையும் நற்சாட்சிப்பத்திரங்களையும் திருப்பி வாங்கிக் கொள்ளப்படுவதுமல்லாமல் காங்கிரஸ் ஆதரவின்பேரில், ஷை தொழிலைக்கொண்டு மற்றைய கண்காக்ஷிகளில் சாமான்களை வைக்காவண்ணம் செய்யப்படும்.

## வியாபாரப் பகுதி.

### பினாங்குக் கடிதம்

கார்த்திகைமீ ௭௨

ஈயம்

| | |
|---|---|
| பினாங்கு விலை | அ௦-௨௯ |

ரப்பர்.

| | |
|---|---|
| புகைபோட்டது பவுண்டு | ௦-௩௩ |
| யூ ஷீட் | ௦-௨௦ |

பங்கு (Share) நிலவரம்.

பினாங்கு மெஸர்ஸ் கென்னடி கம்பனி விளம்பரம்:—

வாங்குபவர்விலை

ஈயம்

| | |
|---|---|
| நார்த் தைப்பிங் | ௧-௨௦ |
| பாப்பான் டின் | ௦-௧௭௫ |
| சௌத் தைபிங் | ௦-௫௫ |
| துரோணம் மைன்ஸ் | ௧௦-௦௦ |
| தொங்கா கம்பவுண்ட் N. L. | ௭/- |
| ஷை Hr டின் ட்ரெட்ஜிங் | ௧௧ |
| செண்டரிபாங்டின்ட்ரெட்ஜிங் | ௧௦/-௫ |

ரப்பர்.

| | |
|---|---|
| காட்டோயாங் B. | அ௦-௧௪ |
| தாப்பா | ௧௦-௦௦ |
| ஆயர் கூனிங் | ௧-௦௦ |
| கிட்டா ரப்பர் கம்பெனி | ௨-௦௦ |

பொது.

| | |
|---|---|
| ஈஸ்டேண் ஷிப்பிங்கம்பனி | ௫—௭௫ |
| ஈஸ்டேண்ஸ்மெல்டிங்கம்பனி | ௬-௦௦ |
| ஸ்ட்ரெயிட்ஸ்ட்ரேடிங் | ௧௨-௭௫ |

உள்ளூர்.

| | |
|---|---|
| ம'தராஸ்உண்டியல்வட்டம் | ௦—௬—௦ |
| ரெங்கூன் வட்டம் | ௧—௪—௦ |





## தனவைசிய வாலிபர் சங்கத்தார்க்கும் அல்லாதார்க்கும் ஓர் அறிவிப்பு.

நண்பர்காள்!

நமது மேன்மைதங்கிய செல்வச் சமூகமானது முன்னேற்றமடைய வேண்டியதற்காக மரகதவிநாயகர் திருவருளை முன்னிட்டு சில சமூக அபிமானச் சிங்கங்கள் ஊழியஞ்செய்ய முன்வந்தனர். அவர்கள் செய்த விடாமுயற்சியின் பலனாக பெரியோர்களாகிய சில உத்தமர்கள் பலவிதத்தும் உதவியாயிருந்து நமது ௯௯ஊர்க்கூட்டமாகிய மகாநாட்டைமுற்றுப்பெறச்செய்தனர். நமது லட்சியங்களில் சில கோவிலூரில் நிறைவேறின. அந்த மகா நாட்டில் நிறைவேற்றிய பெரிய தீர்மானங்களையும் ஒவ்வொரு ஊர்களிலும் சில்லறையாகச் செய்துள்ள தீர்மானங்களையும் சரியாக நடைபெறச் செய்வதற்கும் நமது வாலிபர்களுள் ஒற்றுமையை உண்டாக்குவதற்கும் சமூகக் குறைபாடுகளை அறிந்து ஊழியர்சங்கத்துக்குப்பக்கபலமாகவிருந்து வேலைசெய்வதற்குமாக சுமார் ௪௦ வாலிபர் சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. தற்கால தோரணையை அனுசரித்து கோனாபட்டிலே வெகு விமரிசையாக வாலிபர் மகாநாடும் ஓர் பிரபலஸ்தர் தலைமையின்கீழ் நடைபெற்றது அதில் செய்யப்பெற்ற தீர்மானங்களை நிறைவேற்ற முயற்சி செய்யப்பட்டு வருகிறதென்பது யாவரும் அறிந்ததே. இந்தத் தீர்மானங்கள் சரியாய் நடைபெறுகிறதாவென்று கண்காணிக்கும் வேலையில் நமது பெரியவர்களைவிட வாலிபர்களே அதிக உற்சாகம் காட்டி வருகிறார்கள். இப்படியிருக்க இந்தத்தீர்மானங்களுக்கு விரோதமும் சமூக நலத்துவேஷமுமான எண்ணமுள்ளோர் சிற்சிலர் தாங்கள் தெரியாது செய்யும் குற்றம் வெளியாகிவிடுகிறதே என்று எண்ணி, வாலிபர் சங்கங்களைக்கலைத்துவிடப் பிரயத்தினம் செய்து வருகிறதாகத்தெரிகிறது. என்னே இவர்கள் பேதமையும்அறியாமையும். இப்பேர்ப்பட்டவர்களும் நமது சமூகத்தில் பிறந்திருந்தாலன்றோ ௬௦ வருடங்களாக நம்மவர்களுக்குள்சுயநலம்பரவிஒற்றுமையில்லாமல் குறைபாடுகள் பெருகி சமூக முழுவதும் பிரிவினை என்னும் கொள்ளிவாய்ப் பூதத்தின் வயப்பட்டுத் தத்தளித்துக்கொண்டிருந்தது.

ஒவ்வொரு குடும்பங்களிலும் வாலிபர்களைச் சன்மார்க்கத்தில் பழக்க தாய் தகப்பன்மார் எவ்வளவோ முயற்சிசெய்து வருகின்றனர். அப்படிப் பலநாட் செய்தும் விரைவில் சித்தியுண்டாகிறதில்லை. இந்த வேலையை ஆங்காங்கு சுலபமாகச்செய்யவன்றோ வாலிபர்சங்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அப்படிச் சங்கங்கள் ஏற்பட்டுவேகமாய்ப்பரவிவரும்கிளர்ச்சியினால் அனேக வாலிபர்களிடமிருந்த நாட்பட்ட துற்பழக்கங்கள் ஒருவாறாக நீங்கி வருகின்றன. இது பலருக்குத் தெரிந்திருக்கிறது. இதை அறியாதவர்களும் சிலர் இருக்கிறார்கள். ஆனால் வாலிபர்களின் உற்சாகம் நாளொருவண்ணமாக அதிகரித்துக்கொண்டேயிருக்கின்றது. வாலிபர் சங்கங்கள் சமூகக்குறைபாடுகளை மாத்திரம் நிவர்த்திக்க ஏற்பட்டதென்று எண்ணி விடலாகாது. வெளிப்படையாகச் சொல்வது சமூக நலமாயினும் அதில் பேசுவதும் செய்வதுமானவேலைகள் சமய நலத்தையும், பாஷா நலத்தையும் பொருத்தனவேயாகும்.எந்தச்சமூகத்தில்வாலிபர்கள் உற்சாகமுடையவர்களாயும் ஊக்கமுடையவர்களாயும் இருந்து வருகிறார்களோ அந்தச்சமூகந்தான் விரைவில் முன்னேற்றமடையும். வாலிபர்களை அற்பமாக யாரும் எண்ணிவிடலாகாது. அவர்கள்தான் முன்னேற்றத்தில் மிகுந்த விருப்பமுடையவர்கள். உலகத்திலுள்ள பலஇன்பங்களையும் பார்த்து அனுபவிக்கவும் பெருமை அடையவும் வேண்டியவர்கள். சுத்த எண்ணமுடையவர்கள். நல்ல புஜ பல பராக்கிரமமுள்ளவர்கள். அவர்களுக்கு எவ்வளவுபெருமையுண்டாக்கப்பெரியவர்கள் முயற்சிக்கின்றனரோ அவ்வளவு சமூகத்திற்குச்சிறப்புண்டாகும்.

"தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை சிறு மீன் சினையினும் நுண்ணிதேயாயினும்" வளர்ந்து பெரிதானபின் பெரும் பட்டாளங்களுக்கும் நிழல் கொடுக்கத் தக்கதாகு மென்பதை ஒவ்வொருவரும் நன்கு யோசித்துப் பார்க்கவேண்டும். இப்பொழுதுள்ள பெரியோர்கள் சிறு வயதிலேயே இவ்வாறாகிய வேலைகளை யறிந்து செய்திருப்பார்களாயின் நமது சமூகத்தில் குறைகளும் பிரிவினைகளும் பெருகி யிருக்க மாட்டா. ஒவ்வொரு சிறு வகுப்பினரும் சங்கம் ஸ்தாபித்துக் கொண்டு அதன் வாயிலாக நலமடைகின்றனர். இதைப் பத்திரிகைகளின் வாயிலாக அறியலாம். நம்மவர்களில் குறை சொல்லுகிற சிலர்பத்திரிகைகளைப் பார்த்து உலகத்தின் மாறுதலைக் கண்டு மகிழ்வடைவதில்லை. எல்லாம் பழங் கதையான விதிவசம் கால இயல்பு, தெய்வ சங்கற்பமென்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் போலும் நம்மவர்களில் பெரியவர்களுக்கும் வாலிபர்களுக்கும் பல விதங்களில் ஒற்றுமை வளரவேண்டியதிருக்கிறது. அதற்குப் பல வருடங்கள் பிடிக்கும். ஒரு மாமரத்தை உண்டாக்க வேண்டுமாயின் தக்க நிலத்தில் நல்ல ஒரு மாங்கன்றை நட்டு அது வளர்ந்து பெரிதாகி பூத்துக் காய்த்து முற்றிப் பழமாகி நமது கையில் கிட்டுதற்குச் சில வருட காலம் செல்லுமல்லவா? அதைப் போலவே நாம் விதைத்துள்ள ஒற்றுமை என்னும் விதையும் முளைத்து வளர்ந்து வருகிறது. அதற்குப் பாதகமாக அதைச் சுற்றித்துளிர்த்து வருகிற களைகளை உடனுக்குடனே வேரறக் களைந்து விட்டால் ஒற்றுமை விருட்சம் பருத்து வளரும். அதன் பயனை நாம் அனைவரும் அனுபவிக்க இயலும். ஆகையால் அதைப் பாது காக்க வேண்டியகடமை நமது சமூகத்தில் பிறந்துள்ள ஒவ்வொரு ஆண்மகனையும் பெண் மகளையும் பொறுத்ததாகும்.

அதற்கு மாறாக வாலிபர்களுக்குள் ஒற்றுமை யுண்டாவது விரோத மெனவோ சமூகத்துக்குக் கெடுதி யெனவோ யாரும் எண்ணலாகாது. வாலிபர்கள் பெரியவர்களுக்கு விரோதமாக யாதொன்றும் செய்ய மாட்டார்கள். தீர்மானங்கள் சரியாகக் கைக்கொள்ளப் படுகின்றனவா வென்று மாத்திரம் கண்காணித்து வருகிறார்கள். இந்தத் தீர்மானங்கள் சரியாய் நடைபெறாவிட்டால் வாலிபர்களுக்குத்தான் பின்னர் அதிகக் கஷ்டம் உண்டாகும். சில ஊர்களில் தீர்மான விஷயமாய்ச் சற்றுக் கண்டிப்பாய் இருக்கிற வாலிபர் சங்கஅங்கத்தினருக்கு நமது ஆடவர் மகளிர்சிலர் வசைப்பாட்டுக் கொடுக்கின்றனர். அது ஒரு சிறுதும் நியாயமானதல்ல. அவர்களது அறியாமைக்காக நாம் இரங்க வேண்டியதே. கால மாறுதலிலும் அதனாலுண்டாகும் இயக்கங்களிலும் நமது சமூகம் சம்பந்தப் படக் கூடாதென்றுவிலகியிருப்பினும் நம்மை அவை விடா. எவ்வளவு ஒதுங்கி நின்றாலும் நாம் சேர வேண்டியவர்களே. ஆதலால் என் அருமை வாலிப சகோதரர்காள்! கெடுதலாகச் சிலர் சொல்லும் வசைகளையும் முயற்சியையும் பொருள் செய்யாமல் அப்படி அவர்கள் செய்வதும் ஒரு நன்மை யென்றே எண்ணி நீங்கள் கைக்கொண்டிருக்கும் சமூக சேவையை மனதார நிறைவேற்றுங்கள். 'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார் திண்ணியராகப் பெறின்' என்ற திருவள்ளுவர்பெருமான் வாக்கை சிரமேற் கொண்டு தொடர்ச்சியாய் முயற்சி செய்து வருவோமாயின் நமது லட்சியத்தை அடைவோம். இது முக்காலும் சத்தியம். சமூகத்தை உயரச் செய்ய வேண்டுமென்று யார் கங்கணங் கட்டிக் கொண்டு தூக்கத்திலும் அதே எண்ணமாயிருந்து வேலை செய்கிறார்களோ அவர்களுக்குத் தாசானு தாசனாயிருந்து தெய்வமே ஊழியம் செய்கிறது. உறுதியான எண்ணம் எவர்கள் மனதில் உண்டாகிறதோ அவர்களே தீர புருடர்கள். அவ்வித தீர புருடர்களே வாலிபர்கள். வாலிபர்கள் எண்ணங்கள் திவ்வியமான பராமோத்தமமான சக்தி வாய்ந்தது. இவ்விதசக்திவாய்ந்தவர்களாகவே நமதுமுன்னோர்கள் இருந்துவந்தனர். அவர்களின் சந்ததியாராகிய நாம்பேடிகளல்ல, சிங்கக்கொடிஎன்பது நமது பழய ஞாபகச்சின்னமாகும், அது துள்ளிக்குதிக்கும் உற்சாகத்தை உண்டாக்கக்கூடியது. நம்மிடம் உற்சாகம் இல்லாவிட்டால் அந்தக் கொடிபிடிக்கும் யோக்கியதை நமக்கு வாராது. அவ்வித யோக்கியதை வரும்படி உழைப்பதே நம்கடமையென்று உணர்ந்துவேலை செய்யும்படி வற்புறுத்திக்கேட்டுக்கொள்ளும்,

சு. பழனியப்பா,

ராமச்சந்திரபுரம்.



காளென்செயும்! வினைதானென்
செயும்! என்னை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேச ரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தாலங்காரம்

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி கார்த்திகைமீ௳கஎஉ.

## சமூக சங்கங்களின் வேலை.

"நன்னாக நாட்டில் நவில் சாந்தியாபுரியில் மன்னுதிமன்னருஞ்சொல் வைசியர்கள்" என்றபடி ஆதியில் நாம்நாகநாட்டில்வசித்துவந்தகாலத்தில்ராஜராஜாக்களின்புகழுக்குரியவர்களாக விருந்து வந்தது மன்றி, பிறகு சோணாட்டின்கண்ணுள்ள காவிரிப்பூம் பட்டினத்திலும் சோழ ராஜாக்களுடைய ஒப்பற்ற மரியாதைக்குப் பாத்திராகி பெருமிதத்தோடு செல்வங்கொழித்து வாழ்ந்து வந்தோமென்பது உலக மறிந்த தொன்று. அதன்பின்பாண்டியராஜன் தம் நாடு செழித்தோங்குதற்குநற்குடிவேண்டு மெனசோழமன்னனை வந்து கேட்க, சோணாட்டில்நடந்ததுபோலவேசகல ராஜ மரியாதைகளும் குறைவறநடத்திவர வேண்டு மென்று கூறி, நம்மைப் பாண்டியனிடம் சோழன்ஒப்புவித்ததாகவும், அதற்கு ஒப்புக்கொண்டு பாண்டியராஜன் நம்மை அழைத்து வந்து தம் நாட்டில் மிக மரியாதையாக வாழ்வித்துப்பெருமையடைந்தானென்பது நமது சரித்திர முகத்தானறியக் கிடக்கின்றது. ஆகவே, ஆதி,காலந் தொட்டு பாண்டிய நாட்டிற்கு வந்து அநேக காலம்வரை மிக மேம்பாடோடு வாழ்ந்து வந்தோமென்பதை யாரேமறுத்தற் குரியார்? பிறகு கால மாறுபாட்டினால் சகல சமூகங்களும் தத்தம் நெறியினின்றும்வழுவிப் பலவிதஅநாகரீகப்பழக்க வழக்கங்கட்கு உறைவிடமாக விருந்ததுபோலவே, நமதுசமூகமும் ஆனது ஆச்சர்யமல்ல. ஆனால்,

நமது சமூகத்தில் புராணுண்ணுதல் முதலிய சிற்சிலகொடிய பழக்கங்கள் நீண்ட நாட்கட்கு முன்பேபுகுந்து விட்டன வென்றாலும், ஜாதிக் கட்டுப்பாடான கிராமப் பஞ்சாயத்து முதலிய நற்பழக்கங்கள் நமது பழய தொண்ணூற்றாறூர்க் கூட்டம் ஒழுங்காக நடை பெற்ற வரை,அதாவது:—அறுபது ஆண்டுகட்கு முன் வரை இருந்தே வந்திருக்கின்றன வென்பதும், தொண்ணூற்றாறூர்க் கூட்டம் நின்ற பிறகு தான் கணக்கின்றிப் பெண்ணுக்குப் பணம்வாங்குதலாதிய கெட்டபழக்கங்கள் புகுந்து விட்டன வென்பதும், பலமுறை பேசிய விஷயம்.

சமூகக் குறைபாடுகளை அறிந்து நிவர்த்திப்பதற்காக ஆனி மீ ௩௧௨ (தொண்ணூற்றாறூர்க் கூட்டம்)மகாநாடு கூட்டப்பெற்றது. சீர்திருத்தம் செய்யவேண்டிய பற்பல விஷயங்களுள்,நீண்டநாட்சென்று கூடிய கூட்டத்தில் எல்லா விஷயங்களையும் கொண்டுவந்து போட்டால் ஒருகால் பிளவு உண்டாகலாமென்று கருதி, ஒருசில விஷயங்கள் மாத்திரம் பேசப்பட்டன. மற்ற விஷயங்களைப் பேசுவதற்கு வருடந்தோறும் மகாநாடுகூட்டுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. இப்பொழுது மகாநாட்டில் தீர்மானஞ்செய்த விஷயங்கள்போக, இன்னும் தீர்மானஞ்செய்ய வேண்டிய பல பெரிய விஷயங்களிருக்கின்றன வென்றாலும், அவைகளைச் சமயம் நேர்ந்துழிப்பேசுவோம்.

இப்பொழுது செய்யப்பட்ட தீர்மானங்கள் மூன்று. ஒன்று பெண்ணுக்குப் பணம் வாங்குதல்;இரண்டு ஸ்ரீதனம் கொடுத்தல்; மூன்று சீர் முறை கொடுத்தல். பெண்ணுக்குக் கலியாணச்செலவுக்காக ரூ ௫000 வாங்கலாமென்று தீர்மானித்தார்கள். அதை மீறி இதுவரை ஒரு கல்யாணங்கூட நடந்ததாகத்தெரியவில்லை. அப்படி நடக்கவுமாட்டாது. ஆனால் தீர்மானப்படி ௫000க்கு நடக்கிறதாவென்றால்,சில கல்யாணங்கள் நடந்திருக்கின்றனவேயல்லாமல், போதிய அளவு நடந்து வருவதாகத் தெரியவில்லை. காரணமென்ன? பெண் வைத்திருப்பவர்கள் முன் அதிகமாக வாங்கிய காரணத்தினால் மகாநாடு செய்த தீர்மானம் தங்கள் நன்மைக்காகத்தான் என்பதை யறியாமல் இருந்து வருவதே யல்லாமல், பெண் ஆணைக்காட்டிலும் அதிகக் குறைவென்று கூறுவதற்கில்லை. வேறுசிலர் அடுத்துக் கூடுகின்ற மகாநாட்டில் தொகையை ஏற்றிவிடலாமென்ற நம்பிக்கையின் பேரில்இருப்பதாகவும் தெரிகிறது. நடந்த மகாநாட்டைக் கண்ணுற்றவர்கள் அங்ஙனம் எண்ணுதல் பிசகு என்பதை அறிந்துகொள்வார்கள். கோவிலூர் போந்திருந்தவர்களில்தொகை அதிகமாக வைக்க வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டவர் அதிகமாகவில்லை. அடியோடு ஒழித்து விடல் வேண்டுமென்றகூட்டத்தார்தான் அதிகமாகக் காணப்பட்டனர். தற்போழ்தும்இறைவனருளால் அவ்வுத்தம எண்ணமுடையவர்கள்தாம் நாளுக்குநாள் பெருகிக் கொண்டு வருகின்றனரென்பதை மதி நுட்ப முடையார் அதிசீக்கிரத்தில் தெரிந்து கொள்ளலாம். சென்ற மகாநாட்டிலேயே அவ்வளவு உணர்ச்சி யிருக்குமானால் நாளுக்கு நாள்அறிவு விர்த்தியாகிக் கொண்டு வருகிற இக்காலத்தில்-அடுத்த மகாநாட்டில் தொகையைக் கூட்டுதல் என்பது பகற் கனவு என்பதை நாம் சொல்ல வேண்டுவதில்லை. அடுத்த மகா நாட்டில் "அடியோடு வாங்கக் கூடாது" என்று ஒருகால் தீர்மானமானாலும் ஆகி விடலாம். ஆகவே முன் "எங்குஆகப்போகிறது. ஒருகாலும் ஆகாது; நிறைய வாங்கலா" மென்று நினைத்துக் கொண்டிருந்து மகாநாட்டில் தீர்மான மான பிறகு ஆடிமீ ௩௦௨ க்குள்ளாக மிகமிக அவசரமாகப் பேசி முடித்துஎழுதிவைத்து, பிறகு வாலிபவீரர்களால் கண்டு பிடிக்கப்பட்டு நகரக் கூட்டங்களில் வந்து சிரம்ப்பட்டதுபோலல்லாமல் இப்பொழுதே முந்திக் கொள்ளுதல் நலம்.

"தீர்மானத்தை மீறித்தானேநடக்கப்படாது; எங்கள் இஷ்டம்; பெண்ணைச்சும்மா வைத்துக்கொண்டிருக்கிறோம் அதைப் பற்றி உங்களுக்கென்ன?" என்று சிலர் கேட்கலாம். அஃதுண்மைதான். சட்டப்படி இப்பொழுது ஆகியிருக்கின்ற தீர்மானத்தைக் கொண்டு தடுப்பதற்கில்லை என்றாலும் சிலர் எண்ணப்படி கூடுதல் என்பது ஒரு நாளும் இல்லையாதலால், அடுத்துக்கூடும் மகா நாட்டில் தொகையும் இல்லையென்று செய்து, இப்பொழுது கல்யாணஞ் செய்து கொடுக்காது வைத்துக் கொண்டிருக்கிற மாதிரி இருக்கவிடாது அதற்கு ஒரு உபாயத்தையும் செய்து விடுவார்களானால் இடர்ப்படநேருமாதலின், அதுவரை வாளாவிருந்து விடாது, யௌவனமுள்ள தங்கள் பெண்மக்களின் பருவ காலத்தை வீணேகழித்துத் துன்பப்படப் பார்த்துக் கொண்டிராது அவர்கள் நன்றாகச் சுகித்து வாழும்படி செய்யவேண்டு மென்பதே எமது விருப்பம்.

இனி இரண்டு மூன்றாவது தீர்மானங்கட்கும் யாரும் மீறி நடக்கவில்லையென்றாலும் எந்த நோக்கத்தோடு தீர்மானம் செய்யப்பட்டதோ அந்த நோக்கம்சம்பூரணமாகவில்லை. செல்வைக் குறைப்பதற்காகத் தான் இத்தீர்மானங்கள் செய்யப்பட்டன. நடைமுறையிலங்ஙனம் இல்லை. ஒரு வருஷத்திற்குப் பிறகு கொடுக்கலாமென்பதை ஆதாரமாக வைத்துக் கொண்டு, ஒரு வருஷத்திற்குப்பிறகு தருவதாகக் கல்யாண காலத்திலேயே பேசிக்கொள்ள ஆரம்பிக்கின்றனர். அதனைத்தடுக்க ஜாதி யபிமானிகள் ஒவ்வொருவரும் முயலவேண்டும்.

சமூக நலங்கருதி ஏற்படுத்தப்பெற்றிருக்கும், ஊழியர் சங்கம், வாலிபர் சங்கம், தனவைசிய சங்கம். பொது நலச்சங்கம், சமூக நலங் கருதி இன்னும் வேறு பெயரோடு ஏற்படுத்தப்பெற்றிருக்குமானால் அந்தச் சங்கம் ஆகிய எல்லாச் சங்கங்களும் இப்பொழுது செய்து வருகின்ற தீர்மானத்தை உறுதிப் படுத்துகின்ற வேலையோடுகூட, மேற்குறித்த விஷயங்களையும் ஜனங்கட்கு ஆங்காங்கு பிரசங்கவாயிலாகஎடுத்துச்சொல்லித் தீர்மானத்தை வைத்துக்கொண்டு ஆராய்ச்சிசெய்து அதிற் சொல்லப்பட்ட விஷயங்களை யெல்லாம் செய்ய விட்டுவிடாது, செய்ய வேண்டியது மிகமிக அவசியமாகும்.

---



## நேயர்கள் கவனிக்க.

எனக்கு எழுதும் எல்லாவிதமான கடிதங்களின் மேல்உரைகளிலும் "சொ. முருகப்ப செட்டியார் பத்திராதிபர்" என்று எழுதிவிடுகிறார்கள். அதனால் மிக்கசிரமமுண்டாகிறது. இனி எழுதுகிறவர்கள், பத்திரிகை சம்பந்தமாக எழுதும்போது பெயரைக் குறிப்பிடாமல் "பத்திராதிபர் தனவைசிய ஊழியன்" என்றும், மற்றப்படி யெழுதும் எல்லாக் கடிதங்களிலும் "பத்திராதிபர்" என்று குறிப்பிடாமல் "சொ. முருகப்பசெட்டியார்" என்றும் குறிப்பிட வேண்டு மென்று வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறேன். மாறுபட்டெழுதப்படும் கடிதங்கள் திரும்பிவிடக் கூடும்.

சொ. முருகப்பன்.

## உள்ளூர்வர்த்தமானம்

ஹிந்துமதாபிமான சங்கம்:—நாளிது கார்த்திகைமீ ௩௨ திங்கட்கிழமை மாலை ௫ மணிக்கு பிரம்ஸ்ரீ மோ. வே. கோவிந்தராஜய்யங்கார் அவர்கள் அக்கிராசனத்தில் திருப்பதிசாரம் ஸ்ரீமாந் தி. ப சுப்பிரமணிய தாஸ் அவர்களால் "திருக்குறளின் பெருமை" என்ற விஷயம் சிறந்த மேற்கோள்களுடன் உபந்யசிக்கப் பெற்றதுடன் திருக்குறள் சதாவதானமும் நடைபெற்றது. பின்னர் அக்கிராசனரவர்கள் முடிவுரை கூற சபை இனிது நிறைவெய்தியது

அமிர்தவல்லி ஹாஸ்டல்:—கல்வி இலாகா மந்திரியான ஆனரபிள் கனம் பத்ரோ காரு அவர்கள் 'அமிர்தவல்லி' ஹாஸ்டலுக்கு அஸ்திவாரக்கல் நாட்டும் இடத்திற்கு மேளவாத்தியங்களுடன் சமணிக்கு அழைத்து வரப்பட்டார். ஒஷியார் ஆசனத்தமர்ந்தவுடன் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வர வித்தியாசாலைக் கமிட்டியார்களின் அக்கிராசனரால் மாலையிடப் பெற்றபின் வித்தியாசாலை மாணவர்கள் கடவுள் வாழ்த்துப்பாடினார்கள்.

பின்னர் ஸ்ரீமாந் மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் நகரத்தார்களின் பிரதிநிதியாக கனம் மந்திரி அவர்களுக்கு வந்தனோபசாரம் வாசித்து ஒரு வெள்ளிப்பெட்டியில் வைத்துக்கொடுத்தார்கள் அப்பால் ஸ்ரீமாந் ஆவி. பழ. சிதம்பரஞ்செட்டியாரவர்கள் வித்தியாசாலைக் கமிட்டியாரின் பிரதிநிதியாக உபசாரப் பத்திரம் வாசித்து சமர்ப்பித்தார்கள் அவ்வமயம் கனம்மந்திரி அவர்கள் எழுந்து கல்வியின் அவசியத்தைப்பற்றி விரிவாய்ப்பேசி தேசீயக்கல்வி பரவவேண்டுமென்றும் அதற்கு வேண்டிய முயற்சி தாங்கள் செய்து வருவதாகவும் இன்னும் பல விஷயங்களையும் பேசிமுடித்தார்கள்.

உடனே கனம் மந்திரி அவர்கள் மேளவாத்தியங்களுக்கிடையே அஸ்திவாரக்கல்லை நாட்டினார்கள். அவ்வமயம் ஸ்ரீமாந் பழ. வெ. ராம. இராமனாதன் செட்டியாரவர்கள் எழுந்து ஒரு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள்.

கடைசியாக வித்தியாசாலை மாணவர்களால் ஸ்ரீமாந் பழ. வெ. ராம. இராமனாதன் செட்டியாரவர்கள் பேரில் ஒரு வாழ்த்துக்கவிபாடி கடவுள் வாழ்த்து இராஜ வாழ்த்துப் பாடப்பெற்று சபை நிறைவெய்தியது.

பிறகு கனம் மந்திரி அவர்கள் ஸ்ரீ மீனாக்ஷி பெண் பாடசாலையையும், ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வர வித்தியாசாலையையும் பார்வையிட்டார்கள்.

விஸ்வப்பிராமண மகா ஜன சங்கம்:—நாளிது மாதம் ௩௨ இரவு ௬௨ மணிக்கு ஸ்ரீமாந் சொ. முருகப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் திருப்பதிசாரம் ஸ்ரீமாந் தி. ப. சுப்பிரமணிய தாஸ் அவர்கள் "நாகரீக உண்மை" என்ற விஷயத்தை உபந்நியசித்தார்கள். பின்னர் அக்கிராசனர் முடிவுரை கூற சபை மங்களமாக நிறைவெய்தியது.

## தந்திச் செய்தி

பினாங்கு கார்த்திகைமீ ௧௬௨
மதராஸ்உண்டியல்விலை நூற்றி எழுபத்து நாலு
ஈயம் விலை எண்பத்தொன்று
ரப்பர் விலை ஐம்பத்தொன்று.

சைகோன் கார்த்திகைமீ ௧௬௨
மதராஸ்உண்டியல் விலை இநூற்று இரண்டு.
சிங்கப்பூர் வட்டம் பதினாறு.

ரெங்கூன் கார்த்திகைமீ ௨௫௨

| | |
|---|---|
| வெள்ளை மொச்சை | உஎ0 |
| சிகப்பு மொச்சை | ௩௫0 |
| அரிசிச்சோளம் | கஎ௫ |
| உளுந்து | எ0௦ |
| கடலை | ௬௫0 |
| மதராஸ் உண்டியல்விலை | கஎச |

தவணைவட்டி அரையே அரைக்காலும் அரைவீசம்.

நடப்பு வட்டி நாளை அரையே மூன்று வீசமாகத் தீர்மானமாகும். பணம்கிராக்கி அரிக்சிக்கடைத்தெரு பலமாயிருக்கிறது. புதுவருஷ அரிசிடிசம்பர்மாதவிலை ஐநூறு ஜனவரிமாத விலை நானூற்றெண்பது. நெல்விற்பவர்கள் அரிசிக் கடைத்தெருவைக்கவனித்துக்கொண்டிருக்கிறார்கள்.

# பொதுவர்த்தமானம்.

**கண்டனூர்:**—ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரருக்கும் மற்ற சுவாமிகளுக்கும் அவ்வூர் நகரத்தார்களால் கடைசி சோமவாரமாகிய உஉ-ந்தேதி யன்று வெகு விமரிசையாக சங்காபிஷேகம் செய்யப்பெற்று தீபக்காட்சி அலங்காரங்கள் நடத்தப்பெறும். என்றும் வித்தியாசாலை மிக நன்றாக நடைபெற்று வருகிறதென்றும் ஒரு நிருபர் எழுதுகிறார்.

***

**புதுப்பட்டி:**-தனவைசிய வாலிபர் சங்கத்தின் இரண்டாவது கூட்டம்:-நிகழும் கார்த்திகைமீ அஉ புதன்கிழமை இரவு அ மணிக்குமேல் இவ்வூர் நகரக் கலாசாலைத்தலைமைப் போதகாசிரியர் செ. க. ரெ. ரெங்கசாமி ஐயங்கார் அவர்கள் அக்கிராசனத்தின்கீழ் கூட்டப்பெற்றது. அவ்வமயம் பல அன்பர்கள் உபந்யாசம் செய்தார்கள். அதன்பின் தலைவரவர்கள் தக்க முடிவுரை கூற ௬0 மணிக்கு ஸ்ரீ ஷண்முகநாதன் திருவருளால் சபை இனிது நிறைவெய்தியது. என்று உபகாரியதரிசி மு. வீர. ராம. இராமநாதன் எழுதுகிறார்.

**புதுவயல்:**-தனவைசியவாலிபர் சங்கத்தின் ஆதரணையில் நாளிதுமீ ககஉ சனிக்கிழமை மாலை ௬-மணி முதல் முருகப்ப செட்டியார் ஊருணிக் கரைத் தண்ணீர்ப் பந்தலில் ஸ்ரீலஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள் "பாரததேச மதாந்தரங்களும் ஆர்ய ஹிந்து மதமும்,, என்ற விஷயத்தையும் ௨உஉ ஞாயிற்றுக் கிழமை இரவு எ-மணி முதல் சாக்கோட்டை மண்டபத்தில் "பக்தி" என்னும் விஷயத்தையும் மிக அழகாக உபந்நியசித்தார்கள். சுவாமிகளுடன் வந்திருந்த ராமநாத சுவாமியும் காரைக்குடி ஸ்ரீமாங்சொ. முருகப்ப செட்டியாரவர்களும் கஉஉயில் உபந்நியசித்தார்கள் என்று ஒருநிருபர் அறிவிக்கிறார்.

***

**உலகம்பட்டி:**-ஸ்ரீ ஞானசம்பந்த வாசகசாலையில்நிகழும் துன்மதி வருடம் கார்த்திகை மீ கூஉ மாலை ௩ மணிக்கு ஸ்ரீமாங் சி. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் அக்கிராசனத்தில்சபை கூட்டப்பெற்றுப் பல அறிஞர்கள் சொன்மாரி பொழிந்தனர். இறுதியில் தலைவரவர்கள் சேந்தனார்பிரபாவம் என்பதை அன்பு ததும்ப உபந்யாசித்தார்கள். இரவு அ மணிக்கு சபை நிறைவெய்தியது என்று காரியதரிசி எழுதுகிறார்.

***

துன்மதிஞு கார்த்திகைமீ கஉஉ ஆத்தங்குடி அண்டு முத்துப்பட்டணம் 'பாலகிருஷ்ண பாட்மின்டன் கிளப்' நாளிது மாதம் கூ-தேதி முதல் ஆரம்பஞ் செய்து நடந்துவருகிறது. மேற்படி பாட்மின்டன் கிளப்புக்கு சு. ராம. சு. இராமசாமி செட்டியாரைத் தலைவராக (காப்பிட்டனாக)வும் நா. ரா. சித. நாராயணன் செட்டியாரைக் காரியதரிசியாகவும் நியமித்திருக்கிறது. என்று ஒரு நிருபர் எழுதுகிறார்..

***

**ஷண்முகநாதபுரம்:**—தனவைசிய வாலிபர் சங்கத்தில் கசஉ-மாலை ௫-மணிக்கு ஸ்ரீமாங் சி. சு. செ. விஸ்வநாதன் செட்டியாரவர்கள்அக்ராசனத்தில் ஸ்ரீமாங் மு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள். கல்வி யென்னும் விஷயத்தைப்பற்றியும் ஸ்ரீமாங் மு. ராம. சேதுராமன்செட்டியாரவர்கள் தர்மம் என்ற விஷயத்தைப் பற்றியும் மிக அழகாக உபந்யாசித்தார்கள் ஸ்ரீமாங் ராம. முரு. கதிரேசன்செட்டியாரவர்கள். வந்தனஉபசாரம் சொல்ல ௬இ மணிக்குச் சபை யினிது நிறைவெய்தியது. என்றுகாரியதரிசி எழுதுகிறார்.

***

**சாக்கோட்டை:**—சோமவார மஹோத்சவமானது புதுவயல் தனவைசியர்களால் கார்த்திகைமாதச்சோமவாரங்களில் ஸ்ரீவீரசேகரர் உமையாம்பிகை ஸ்கந்தர் கணேசாதி மூர்த்தங்களுக்கும் பரிவார தேவதைகள் நாயன்மார்களுக்கும் விசேஷ அபிஷேக அலங்காரம் ஆராதனைகள் வழக்கம் போல இவ்வருஷமும் விமரிசையாக நடைபெற்று வருகின்றன.

நாளிதுமீ உஎஉ சாயரக்ஷை மேற்கண்ட மூர்த்திகளுக்கு சங்காபிஷேகம் முதலிய அபிஷேகங்களும் செய்து சர்வ ஆபரணங்களினாலும் பரிமளமிகுந்ததாராளமான புஷ்பங்களினாலும் அலங்காரங்கள் செய்து ஆராதனைகள் சோடச உபசாரங்கள் செய்வது ஆதிசேஷனாலும் செப்புதற்கரிது.

அன்றுதினம் அன்பர்கள் அநேகவோர்களும் அங்கு விஜயஞ் செய்துசோம வார மகாபிரதோஷ சிவாலய தெரிசன பலன்களைப் பெற்று நீடூழிகாலம் வாழவேண்டுமாய்க் குகப்பெருமானைப் பிரார்த்திக்கின்றேன் என்று ஒரு புதுவயல் நிருபர் எழுதுகிறார்.

***

**கீழச்சிவற்பட்டி அளகாபுரி:**-தனவைசியசங்கம் கடந்த ஐப்பசி கஙஉ-ஞாயிற்றுக் கிழமைபிற்பகல் இரண்டு மணிக்கு சங்கத்தின் அக்கிராசனர் ஸ்ரீமாங் சி. வீர. சி. லெட்சுமணன் செட்டியார் அவர்களால் மாதாந்தக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் கற்பு நிலைமை என்பதைப் பற்றி சொ. முத்துப்பழனியப்ப செட்டியாரவர்களும் நன்றி மறவாமை என்பதை லெ. மு. நாகப்ப செட்டியாரவர்களும் வேதாந்தக்கருத்து என்பதை ராம. கயி.அருணாசலம் செட்டியாரவர்களும் நன்கு உபந்யசித்தார்கள். பின்பு ஜாடி, மங்கு, அலமோனியப் பாத்திரம் முதலிய மேற்கு நாட்டுச் சாமான்களை வாங்குதலை நமது சமூகத்தார் இனியாகிலும் அறவேஒழிக்க வேண்டுமென்றும், அதிலும் முக்கியமாக சங்கத்தின் அங்கத்தினர்கள் மேற்படி சாமான்களை பஹிஷ்கரித்து செய்கையில் நடத்திக்காட்டக் கடமைப் பட்டவர்களென்றும், இதன் அவசியத்தை எல்லோரும் நன்குணர்ந்து நடந்து கொள்ள வேண்டுமென சிபார்சு செய்து கொள்வதாகவும் சபையோர்களை ஸ்ரீமாங் லெ. மு. லெட்சுமணன்செட்டியாரவர்கள் கேட்டுக்கொண்ட பின்னர் வயி.முத்தையா செட்டியாரவர்களால் தேவாரம் திருப்புகழ் முதலிய இன்னிசைப் பாக்கள் பாடப்பெற்றுச்சபை இனிது நிறைவெய்தியது, என்று காரியதரிசி மு. லெ. சோமசுந்தரஞ்செட்டியார் கார்த்திகைமீ கூஉ நமக்கு அறிவிக்கிறார்.

***

**கோலப்பில்லா:**—கந்தசாமி கோவில் திருவிழாக் கொண்டாட்டம்:-இவ்வருஷம் சூர சம்ஹாரம் முடிந்த மறுதினம் திருக்கல்யாண உத்ஸவததை நகரத்தார்களும் கணக்கப்பிள்ளை கடைக் காரர்களுமாகச் சேர்ந்து வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். இதற்கு முன் வருஷம் ஒற்றுமை யின்மையினால், நகரத்தார்கள் சேராது கணக்கப்பிள்ளை கடைக்காரர்கள் மட்டிலும் சேர்ந்து நடத்தினார்கள் இவ்வருஷம் நடந்ததுபோல் எவ்வருஷமும் ஒற்றுமையோடு நடந்து வருமாறு கந்தசாமி அருள் புரிவாராக என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

***

**எல்லாரும் அச்சிடலாம்:**—என்னாற் செய்யப்பட்ட மதவிஷயமானதும், இராஜீய சம்பந்தமுள்ளதும், இரண்டுங் கலப்புள்ளதுமாகிய சாஸ்திரங்கள் பலவுள்ளன. இவைகளை இதுவரை லக்ஷக்கணக்கான புஸ்தகங்கள் அச்சிட்டு இலவசமாக எல்லா ஜனங்களுக்கும் கொடுக்கப் பட்டிருக்கிறது. யாரார் எந்தெந்தப் புஸ்தகங்களை அச்சிட்டுக்கொள்ளவேண்டுமானாலும் என் அனுமதியில்லாமலே அச்சிட்டு ஜனங்களுக்கு இலவசமாகக் கொடுக்கலாம் என்று விலக்ஷணானந்த சுவாமிகள் தெரிவிக்கிறார்கள்.

*0*

**கடியாபட்டி:**-சென்ற வாரம் இவ்வூர் பிரீ ஹைஸ்கூலில் ஸ்கவுட்டுகள் வருடக் கொண்டாட்டத்தில் செய்து காட்டிய விளையாட்டுகள் நன்றாயிருந்தன. இம்முறையை வாலிபர் சங்கத்தார் பின் பற்றுவார்களானால் பெரிதும் நலமடையலாம் என்று ஒரு நிருபர்எழுதுகிறார்.

---



# விருத்த பால்ய விவாகம்.

பள்ளத்தூர் கே. ஆர். எம். இராமநாதன் செட்டியார் எழுதுகிறார்:—

பாலிகைகளைவயதில்மூத்தவருக்கு மணஞ்செய்தலைத்தடுத்தல்வேண்டும். "அரியது கேட்கின் வரிவடி வேலோய், அரிது அரிது மானிட ராதலரிது, மானிடராயினுங் கூன் குருடு செவிடு பேடு நீக்கிப் பிறத்தலரிது பேடு நீக்கிப் பிறந்தகாலை, ஞானமுங் கல்வியும் நயத்தலரிது" எல்லாப் பிறப்பினும் மேம்பாடுடைய மானிட ஜன்மத்தைப் பெற்று அதோடு கல்வியைக் கற்றும் ஞான உணர்ச்சியுடையோராவிருந்தும் என்னபயன். அவ்வழிநடக்கநம்மனம் சென்றாலும் நம் பழையவழக்கங்களுக்கு அஞ்சி நல்வழியில்நடக்க அஞ்சுதலுடையோராயிருக்கின்றோம். இவ்வுலகின் கண், அநேககோடி மாந்தர்கள் சந்தானமில்லாமையால் சந்தானத்தைக்கோரி அநேக நோன்புகளை நோற்றும் அநேக விதமான அறங்களைச்செய்தும் அநேக விதமான உபவாசங்களை அநுஷ்டித்தும் பூர்வ ஜன்மத்துப் புண்ணிய வசத்தாலும் இப்பிறப்பில் செய்த புண்ணிய மேலீட்டினாலும் குழந்தைகளைப்பெற்று, நமக்குக் கடவுள்சந்தானப் பிச்சையை அளித்தனரே என்று ஆனந்தமென்னும் கடலில் மூழ்கி அக்குழந்தையை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து அதிக அன்பு பாராட்டி அவர்கள் விவாக விஷயத்தில் மாத்திரம் அவர்களை மீளாவேதனைக் குட்படுத்தி விடுகின்றார்கள். ஒரு வீணையானது மிக உயர்ந்ததாகவிருப்பினும் அதில் பூட்டும் தந்திகள் தகுந்தனவாயிரா விடின் கேட்போர் செவிக்கு ரமணீயமாயிராது. அவ்வாறு பெண்களுக்குத் தகுந்த கணவர் வாய்க்காவிடின் அது பிரகாசியா. பத்து அல்லது பதினைந்து வயதுடைய ஒரு பெண்ணுக்கும் நாற்பது அல்லது நாற்பத்தைந்து வயதுடைய புருஷனுக்கும் மணஞ் செய்துவைக்கின்றனர். அதிலும் நம்மவருள் ஒரு கொடிய வழக்கமிருந்து வருகிறது. அதாவது:— விவாகபுருஷன் பெண் சம்மதத்தை கேட்பதே கிடையாது. மணப் பெண்ணுக்கு இஷ்டமில்லாதிருந்தாலும் விவாகத்தை நடத்தி வருகின்றனர். அப்போது அப்பெண்ணின் மனம் எவ்விதத் துன்பத்திற்கு உள்ளாகி இருக்குமென்பதைச்சற்றேனும் பெண்ணின் தாய் தந்தையரேனும் உற்றாருறவினரேனும் கவனிப்பதில்லை. அப்பெண் பெரியோர்களுக்கஞ்சி விவாகத்தைச் செய்து கொண்டு துக்க சாகரத்தில் மூழ்கி அல்லற் படுகின்றனள்: அவர்கள் வாணாட்களை வீணாட்களாய்க் கழிக்கின்றனர். அப்பெண்மணிகள் தங்கள் மனதுக்கிசைந்த வாலிபநாயகரை அடையின் அவ்விதக் கஷ்டங்களுக்கு உள்ளாகார்கள். புதல்விகளுக்குத் தகுந்த கணவரைத் தேடுபவர்களே அப் பெண்மணிகளின் மேல் அன்பைக்காட்டும் தாய்தந்தையர்களாவார்கள். அப்படியில்லாது வயதின் மூத்தோர்க்கு அர்ப்பணம் செய்து அப்பெண்மணிகளை மீளாத துக்கசாகரத்தில் வீழ்த்தும் தாய்தந்தையர் அவர்கட்குற்றபெற்றோரல்லர். அவர்களுக்கு சத்துருக்களே யாவர். அக்குழந்தைகளை அன்புடன் வளர்த்துக் கிளியைவளர்த்துப்பூனை கையிலொப்பிவித்ததைப் போல் கிழவர்களுக்கு மணஞ் செய்வித்து அவர்கள் படும்கஷ்டத்தைக்கண்டு சகிக்கவியலாராகித்தாமும்வியாகுலப்படுகின்றனர். வயதில் மூத்தவர்களாயிருந்தாலும் ஆஸ்தி அதிகமிருப்பதோடு நாத்தி மாமி கொடுமையில்லாமல் சுகமாயிருக்குமென்ற எண்ணத்தினாலும் சில தாய் தந்தைகள் கங அல்லது கசு வயதுள்ள தங்கள் பெண்மணிகளை ௬0 அல்லது ௬ரு வயதுடையவர்களுக்கு மணம் செய்கின்றனர். பிறகு ரு0 அல்லது ருரு வயதுக்கு மேலிருத்தல் அசாத்தியமாதலால் அப்பெண்ணின் கதி என்ன ஆகும். அச்சமயம் அப்பெண்ணுக்குச் சரியான வாலிபம். அப்பெண் விதவையாயின் தன் சரீரத்தில் உயிரற்றவளாய்ப்பிரேதம்போல் உலாவுகிறாள். என்னே பரிதாபம். என்ன கொடுமை! அக்காலை அப்பாலிகை படும் துயரத்தை எடுத்துச் சொல்ல யாரால் முடியும். அப்பாலிகையைச் சிருஷ்டித்த ஈஸ்வரருக்கே தெரியும். பணத்தாசை கொண்டு தங்கள் பாலியப்பெண்களை மணம் செய்து துக்கசாகரத்தில் மூழ்கும்படி செய்கின்றனர். புருஷன் இறந்துவிட்டால் அத்துடன் எல்லாவித சுதந்தரங்களையும் இழந்து விட்டதாக எண்ணி ஆண்பாலரும் பெண்பாலரும் புறக்கணிக்கின்றார்கள். எதிரில் நின்றாலும் துர்சகுனமென்கின்றார்கள். அவள் துரதிஷ்டை; கொடுத்து வைக்காதவள்; அவள் தலைவிதி அவள் அனுபவிக்கின்றாள்; என்றும், அப்பேதைப் பெண்ணை அவள் அனுபவிக்கும் துன்பம் போதாதென்று புண்ணிற்கோலிட்டது போல் நிந்திக்கின்றனர். அவர்களுக்குச் சற்றேனும் இரக்கம் கிடையாது. என்ன பரிதாபம்! அவள் தலைவிதி என்பது விவேகமற்ற பெற்றோர்கள் செயல்தான். வேறல்ல. வயதுக்கிரமத்தைப்பற்றி, மிகவும் மேம்பாடுடையவரான சுவாமி விவேகாநந்தர் கொண்ட கருத்தையும் அமெரிக்காவிலிருந்து அவர் எழுதியவற்றில் மாதர்கள் சம்பந்தமாய்ச் சொல்லும் வார்த்தைகள் சிலவற்றையும் இங்கு எடுத்துச் சொல்வதில் நம்முடைய நண்பர்களுக்கு ஆயாசமேற்படாதென்றுநம்புகிறேன். "இந்நாட்டு மாதர்கள் மிகவும் சுத்தமுடையோராகவும் பதிவிரதைகளாகவும் இருக்கின்றார்கள். இருபது அல்லது இருபத்தைந்து வயதுக்குமுன் பெரும்பான்மை ஸ்திரீகளுக்கு விவாகம் செய்வதில்லை. இவர்கள் வானத்துப் பறவைபோல் ஸ்வதந்திரம் உடையோராகத் திரிகின்றார்கள். சந்தைக்குப் போகின்றார்கள். பள்ளிக்கூடங்களுக்கும் கலாசாலைகளுக்கும் போகின்றார்கள். பணம் சம்பாதிக்கின்றார்கள். எல்லா வகையான தொழிலும் செய்கின்றார்கள். பொருளுடையோர் ஏழைகளுக்கு உபகாரம் செய்வதில் ஈடுபட்டிருக்கின்றார்கள். நமது தேசத்தில் நாம் யாது செய்கிறோம். நமது குமாரிகள் கெட்டுப்போகாமல் பதினோறு வயதுக்குமுன்னாகவே அவர்களை மிகவும் கணக்காகவே விவாகம் செய்துக்கொடுத்து விடுகிறோம். நம்முடைய மநு எங்ஙனம்விதித்திருக்கின்றார்:— "பிள்ளைகளைக்காப்பாற்றி கல்விகற்பிப்பதுபோலவே அதேயளவு ஜாக்கிரதையுடனும் சிரத்தையுடனும் பெண்களைக் காப்பாற்றவும், பயிற்றவும், விவாகம் செய்யவும் வேண்டு"மென்கிறார். முப்பது வயது வரையில் பிரமசர்ய விரதம் அநுஷ்டித்த பிறகே பிள்ளைகளுக்கு விவாகம்செய்து வைக்க வேண்டும். அதுபோலவே தாய் தந்தையர் பெண்மக்களையும் பிரமசர்ய விரதம் காக்கும்படி செய்து கல்விகற்றுக் கொடுக்கவேண்டும். இப்படியிருக்க நாம் அநுஷ்டானத்தில் என்ன செய்கிறோம். இந்தியா தேசத்தினரே நீங்கள் உங்கள் ஸ்திரீகளின் நிலைமையை உயர்த்தமுடியுமா அங்ஙனம் செய்தால் நீங்கள் க்ஷேமத்துடன் வாழ வழி ஏற்படும். இல்லாவிட்டால் இப்போதிருப்பதுபோலவே தாழ்ந்த நிலையிலிருப்பீர்கள். இங்ஙனம்,விவாகானந்தன்" மேற்கூறப்பட்ட வசனங்களிலிருந்து சுவாமி விவேகானந்தர் நம்முடைய தேசத்திற்கு விமோசனம் ஏற்பட வேண்டுமானால் அதற்கு மூலாதாரமாக நம்முடைய ஸ்திரீகளுக்கு பரிபூர்ண ஸ்வதந்திரம் கொடுக்க வேண்டுமென்றும் அவர்கள் பாட சாலைகளிலும் கலாசாலைகளிலும் நிறைந்து கிடக்க வேண்டுமென்றும்வயதுவந்த பிறகே விவாகம் நடத்த வேண்டு மென்றும் கருதினரென்பது மிகத் தெளிவாகப் புலப்படுகிறது. அவர் யோசனை பண்ணாத பெரிய விஷயமே கிடையாது. கண்ணபிரான் கீதையை உபதேசம் புரிந்து சகலவித மனுஷ்ய சம்சயங்களையும் அறுத்து வேத ஞானத்தை நிலை நிறுத்திய காலத்திற்குப் பின்பு இந்து மதத்தின் உண்மைக்கருத்துக்களை முழுதும் மிகத் தெளிவாக

சர்வ ஜனங்களுக்கும் புலப்படும்படி வெளியிட்டுரைத்த ஞானியான விவேகானந்தரே நம்தேசத்துவிவாக விஷயத்தில் குறைகூறியிருக்கின்றார். ஆதலினால் தக்க பருவ காலத்திலே ஒத்த வயதினருக்கே மணவினை முடிப்பித்தல் வேண்டும். நம் நாட்டில் தாரமிழந்த கிழவர்கள் சிறு பெண்களை மணம் செய்து கொள்கின்றார்கள். முதல் மனவியைச் சுடுகாட்டிவிட்ட தினமே உற்றார் உறவினர் கிழவர்களுக்குப் பெண் பேசி விடுகின்றார்கள். புத்திரர்களைப் பெற்றும் மற்றெல்லா சுகங்களையும் அனுபவித்துவயதுசென்ற ஒருவர் தம் மனைவி இறந்தவுடன்உலகப்பற்றை அம்மனைவியுடன் எரித்து விடவேண்டும். பின் தன் மக்கட்கும் மற்றவர்சட்கும் பயன்படும் படியாய் தன் வாணட்களைக் கழிக்க வேண்டும். வயதின் மூத்தோர்களாயிருந்து கல்யாணம் செய்து கொள்ள விரும்புபவர்கள் சாரங்கதரன் கதையை நினைத்துக் கொள்ள வேண்டும். விவேகமுள்ள தாய்தந்தையர்களும் சகோதர சகோதரிகளும் நண்பர்களும் கிழவர் சிறுமி விவாகத்தைத் தடுக்க வேண்டும். சத்தியத்தின் வழி நிற்பதற்கு அஞ்ச வேண்டுவதில்லை. தைரியத்தைக் கைவிடவேண்டுவதில்லை.

இப்பிரபஞ்சத்தில் மானிடரடையக்கூடியது யாது? அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று. அவைகளை அடையக்கூடிய மார்க்கமெதுவெனின் இல்லற தர்மத்தை வழுவாது நடத்துதலேயாம். அப்படி இல்லாதவருக்குநான்காவதாகியவீடு எனுமோட்சபதவி கிட்டாதென்றே யாவருமொப்புக்கொள்வார்கள். மேற்சொன்ன விவேகமற்ற விவாக முறைகளினால் ஒற்றுமைஎன்பதும் சமாதானமென்பதும் ஸ்திரீ புருடர்களுக்கில்லாதுபோயின் இல்லறம் சரிவர நடந்தேறாமல் பாபத்துக்காளாவார்கள் என்பது சொல்லாமலே விளங்கும். வாயற்ற நிரபராதிகளாயிருக்கும் யௌவன குமாரிகளைத்தாங்கள் பெற்று எடுத்ததின் பயனாக ஆழ யோஜித்து விவாகம்செய்து கொடுப்பதே புத்திசாலித்தனமுள்ள பெற்றோர்களின் கடமையாகும். ஸ்திரீ புருஷர் ஒரு மனத்தராய்உடலிரண்டு உயிரொன்றென்று ஒத்து வாழ்தலே இல்லறத்தை வழுவாதுநடத்துதற்கு முக்கியமான வழியாகும்.

---

## நமது நாட்டுப்பெண்களின் நவீன நாகரீகம்.

நமது நாடானது மிகவும் தாழ்ந்த நிலைமையில் இருக்கிறது. இந்த நிலைமையில் எல்லோரும் சேர்ந்து உழைத்து நாட்டை உன்னத நிலைக்குக் கொண்டு வரவேண்டும். அதில் நாமும் உழைக்கவேண்டும். உழைக்கும் ஒரு சிலரைக் குறைகூறக்கூடாது. பரதேசச்சாமான்களை விலக்கவேண்டும். இதில் பெண்கள் விலக்கக் கூடிய சில பரதேசிச் சாமான்களுண்டு. அவையாவன:- சோப்பும் வாஸ்லயன் என்னும் எண்ணையும், காப்பியுமே.

சோப்பை உபயோகிப்பதனால் ஒரு விதமான உபயோகமுமில்லை. நமது நாட்டுப்பெண்களெல்லாம் முற்காலத்தில் தினந்தோறும் மஞ்சள் பூசுதல் உண்டு. இக்காலததிலோ அதற்குப் பதிலாக சோப்பைப் போட்டுக் கொள்கிறார்கள். மஞ்சள் பூசுதலைச் சிலர் இக்காலத்திலும் வைத்துக் கொண்டிருக்கின்றனர். மஞ்சள் பூசுவதால் முகத்தில் வரக்கூடிய, பரு முதலியநோய்கள் வரமாட்டா. முகம் மிக லெக்ஷணமாக இருக்கும். சோப்பை உபயோகிப்பதனால் கூ-மாதக்காய்ச்சற்காரிபோல முகம்வெளுத்து இருக்கும். இதை அடியோடு நிறுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்வதுடன், வாலிபர்களும் அவர்களுடைய மனைவி, சகோதரிமுதலியோரை இக்காரியத்தை நிறுத்தும்படியாகச் சொல்லவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். நமது நாட்டு மஞ்சளை உபயோகியுங்கள்.

வாஸ்லயனும் அதே மாதிரியே. இது ஒருவிதத்திலும் சிறந்ததில்லை. பணச் செலவுதான். காப்பியோ சொல்லவேண்டாம். குளிர் தேசத்திலுள்ளவர்கள் உஷ்ணமான காப்பியைக் குடித்தால் கொஞ்சம் சுறுசுறுப்பாக இருக்கும். உஷ்ண தேசத்திலுள்ள நாம் குடித்தால் அதிக உஷ்ணமுண்டாகும். நமக்கு உள்ள உஷ்ணம்போதும். அது அதிக உஷ்ணத்தை உண்டாக்கும். ஆகையால் அது நமக்குவேண்டாம். மேற்சொன்ன காரியங்களை நீக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

அ. தே. மு. மு. அருணாசலம்.

---

## செட்டியார்.

நண்பர்காள்!

கோனாபட்டில் கூடிய நம்வாலிபர் மகா நாட்டில் நாம் ஒவ்வொருவரும் செட்டியார்என்றேவழங்கிவரவேண்டுமென்று செய்ததீர்மானத்தை ஆதரித்துஸ்ரீமாந் சு. பழனியப்பா அவர்கள் நமது ஊழியன் மலர் இரண்டு இதழ் ஏழு எட்டில் வரைந்துள்ள வியாசங்களை நம் சகோதரர்களனைவரும் கண்ணுற்றிருக்கலாம். நண்பர் அவர்கள் விரிவாகவும், பல உதாரணங்களுடனும் நன்றாய் வரைந்துள்ளார்கள். சமூகநலங்கருதிய அவர்கள் வேண்டுகோளின்படி காலத்தின் முற்போக்கையநுசரித்து நாமனைவரும் செட்டியார் என்று வழங்கி வரவேண்டுவதவசியமாகும். இவ்விஷயத்தில் இஷ்டமுள்ளவர்களும் இல்லாதவர்களுமிருக்கலாம். இல்லாதவர்களும்கூட நம் ஜாதிப்பெருமையைக் காப்பாற்றும்பொருட்டு செட்டியென்று உபயோகிப்பதை நிறுத்தி செட்டியார் என்று யெழுதுகிற-பேசுகிற வழக்கத்தைநக்கைக்கொள்ளவேண்டும். ஒன்றைப் புதிதாய்ச் செய்ய வேண்டுமானால் "அவர்கள் முன்னால் செய்யட்டும் இவர்கள் முன்னால் செய்யட்டும் அப்பால் நாமும் செய்வோ"மென்றிருப்பது நம்மவர்கள் வழக்கம். அவ்வழக்கமென்ற வார்த்தையை இவ்விஷயத்திலும் கொண்டுவந்து விடாது, நம் தனவைசியகுலத்துதித்த (செட்டியார் என்று வழங்கி வருபவர்களல்லாத) அருமைச் சகோதரர்கள் ஒவ்வொருவரும் இவ்வாரமுதல் ரிஜிஸ்டர் தஸ்தாவேஜு முதல் சிறு ரோக்கா வரையில் செட்டியார் என்றே எழுதி வரவேண்டுமாய் சமூக நலங்கருதி யானும் வேண்டிக் கொள்கிறேன்.

வீரப்ப செட்டியார்,
அ. சிறுவயல்.

---

## மூவார் நகரத்தார்கள் கவனிக்க.

எனதன்பிற் சிறந்த பெரியோர்களே!

நமது குல தெய்வமாகியும் கலியுக வரதனாகியும் வள்ளியம்மை தெய்வானை சமேதராய் வீற்றிருந்தருளுகின்ற ஸ்ரீ முருகப்பெருமானுக்கு சிறு ஆலயமாயிருந்ததை நீங்கள் எல்லோரும் ஒன்று கூடி, வருஷாவருஷம் நடாத்திவரும் கார்த்திகைப்பூசைக்கு ஆலயம் பெரிதாய் வேண்டுமென்று நிச்சயித்து சிறு ஆலயத்தை அப்புறப்படுத்தி பெரிய ஆலயம் கட்டுவதற்கு ஏற்பாடுகள் நடாத்தி ரௌத்திரி-ஆடி தைமீ கூடியில் வாலாலய கும்பாபிஷேகம் நன்றாய் நடத்தினீர்கள். இதுவரை அந்நாட்டிற்கு விளைபொருளாயுள்ள ரப்பர் விலை இறங்கியிருந்ததை உத்தேசித்து வேலைகளும் தாமதமாயிருந்ததாய்த்தெரிகின்றன. தற்போது ஷை ரப்பர் விலை கூடுதலாகத் தெரிகின்றன. இன்னமும் கூடிய சீக்கிரம் கூடுமாறு ஸ்ரீ முருகப்பெருமான் அருள்புரிவார். நீங்கள் எல்லோரும் ஒன்றுகூடி ஷை ஸ்ரீமுருகப் பெருமான் ஆலயத்தைக்கட்டுவித்து மகா கும்பாபிஷேகமும் நடாத்தி வைப்பீர்களாக.

ராம. பி. சித. சிதம்பரம் செட்டியார்
ரெங்கூன்.

---



## விலைமகளாசையை விரும்பாதொழிமின்.

தனவைசிய சகோதரர்களே! மேற்கண்டவிஷயமாக எனக்குத் தெரிந்தவரை எழுதுவதிலுள்ள குணத்தைக் கிரகித்துக் கொள்வீர்களென்று நம்பி எழுதலானேன். அதாவது நாம் நமது மனைவியின்பால் காதலை (காமமென்னும் மாதரிச்சையை)ச்செலுத்துவதே கடமையாகும். அஃதன்றிக் கொண்ட மனைவி யிருக்க கூத்தியரிருப்பிடம் செல்வது அழகோ? குலமகளிருக்க விலை மகளிடம்செல்வது எதற்காக? இவர்களார்? அவர்களார்? என்பதை ஆராய்வோம். இருதிறத்தாரும் பெண் பாலாரே! இதனுள் விலைமகள் குணம் எப்படி எனின் "அன்பின் விழையார் பொருள் விழையு மாய்தொடியார் இன்மசா விழுக்குத் தரும்" 'தந் நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள்' என்றதேவர் குறளாலும், 'அன்னையே யனைய தோழியறந்தனை வளர்க்குமாதே புனையோருண்மை கேட்பேனுரைதெரிந் துரைத்தல் வேண்டுமெனனையே புணருவோர்களெனக்கு மோரின்ப நல்கிப் பொன்னையுங் கொடுத்துப் பாதப் போதினில் வீழ்வதேனோ?', 'ஆத்த மனையாளகத்தி லிருக்கவே, காத்த மனையாளைக் காமுறுங் காளையர் காய்ச்ச பலாவின் கனி யுண்ண பாட்டாமலீச்சம் பழந்தக்த இடருற்றவாறே' என்ற பெரியார்வாக்காலும் 'விலைமகட்கழகு தன் மேனி மினுக்குதல்' என்ற ஔவைப் பிராட்டியார் வாக்காலும் விளங்கற்பாலதே காசுக்கு மானத்தை விற்றக் காலங்கழிக்குங்கன்னியர் வலையில் சிக்குண்டு நம் தனவைசிய சகோதரர்களிற் சிலர் 'காமத்துக்குக் கண்ணில்லை' என்று சொல்லிக்கொண்டு எந்த நேரமும் கூத்தியர் வீடே கதியென்றிருக்கின்றார்கள். இவர்களிற் பலர் அந்நியர் மனைவியைத் தாயென்று கருதாது கற்பழிக்கவும் முற்படுகின்றனர். இவர்கள் தானிப்படியிருக்கிறார்களென்றால், வயதிற் பெரியோர் பலர் இந்த விதமாக இருக்கிறார்களென்பது நேயர்களறிந்த விஷயமே. என்னே இவர்களின் புன்மதி யிருந்தவாறு! இவர்களிற் சிலர் பணத்தையுங் கொடுத்து நூற்றுக் கணக்காகச் செலவு செய்து விற்கக்கூடிய தீராப்பிணியாகிய சரக்கை வாங்கிக்கொண்டு படுமவஸ்தைகள் கணக்கிலடங்கா. 'காமத்தாலிந்திரன் கலக்க மெய்தினான் காமத்தாலிராவணன் கருத்தழிந்தனன் காமத்தாற் கீசகன் கவலையுற்றனன் காமத்தா லிறந்தவர் கணக்கிலார்களே' என்ற பாவை இவர்கள் கருத்தில்வைத்து இனியாவது விலைமகளிருப்பிடம் விசாரியாதிருப்பாராக. இதற்கொரு உதாரணமுண்டு. அஃதென்னவென்றால் ஒரு இடத்தில் நாலைந்துநிற(வர்ண)முள்ளகிளாசில் பாலைக் காய்ச்சியூற்றி ஒவ்வொன்றையும் தனித்தனியே சாப்பிட்டு ருசி எப்படி யிருக்கிறதென்றுபாருங்கள். நிற வித்தியாசத்தைத் தவிர எல்லாம் ஒரு ருசியாகத்தானிருக்குமென்பதிலைய மின்று. சகோதரர்களே! இரு திறத்தாருக்கும் தோல் வித்தியாசந்தானிருக்குமென்பது தெளிவாய் விளங்கலாம். ஆதலின் இனித் தங்கள் மனதை உறுதியாக விலை மகளென்று மதிக்கப்படும் வேசையரிடம் செலுத்தாதிருக்க எல்லாம் வல்ல மரகத விநாயகர் அருள் புரிவாராக.

சித. நாராயணன்,
ஆ. முத்துப்பட்டணம்.

---

## மடச்சிஷ்யனுக்கும் கோவிற் சுயம்பாகிக்கும். நடந்த சம்பாஷணை.

சுயம்பாகி:—என்ன! இன்று அகம் பிரஹ்மாஸ்மி எத்தனை நாழிகை தேவி பாதபூஜை பண்ணினார். அதற்கு எத்தனை ஆத்ம கோடிகள் வந்திருந்தார்கள்?

மடச்சிஷ்யன்:—இன்று ஊரெல்லாம் வீடுவீடாய்ப் போய் பூஜா விமரிசையைப் பற்றிச் சொல்லியும் ஒரு புருஷாத்மாவாவது வரவில்லை.

சுயம்பாகி:—ஏன்?

மடச்சிஷ்யன்:—தேவி பூஜைக்கு ஸ்திரிபிரஜ்ஜைகள் தானே அதிகம் தேவை?

சுயம்பாகி:—உங்கள் ஸ்வாமிகள் சந்நியாசியா? பிர்ம சாரியா?

மடச்சிஷ்யன்:—ஏன்? இரண்டும்தான்ஆனால் நைஷ்டிக பிர்மசாரிகள் காஷாயம் தரிக்கலாமென்பது உனக்குத்தெரியாது பற்றி அப்படிச் சந்தேகப் பட்டாய்.

சுயம்பாகி:—ஆமாம். பட்டு மெத்தையும் பட்டுவிசிறியும் வெள்ளிப் பாத்திரங்களும் சந்யாசியாகிற பிர்மசாரிக்கு என்னத்துக்கு?

மடச்சிஷ்யன்:— செட்டி நாட்டிலேயே வேஷதாரிகளிடத்தில் மயக்கமுண்டு. அதிலும் செட்டிப் பெண் பிள்ளைகளுக்குக் கேட்க வேண்டுமா? புடலங்காய்ப் புராணத்துக்கே சாமான்கள் ஏராளமாய்க் கொடுக்கும்வர்கள் பிர்மஐக்கியத்திற்கான உபதேசம் செய்யுங்குருவுக்கு எவ்வளவு கொடுக்க மாட்டார்கள்?

சுயம்பாகி:—அது சரி. பிரமசாரி ஒரு குருவில்லாமலே காஷாயத்தை எடுத்து மேலே போட்டுக் கொண்டு விடலாமோ? அப்படியானால் பிராமணன் சந்யாசி வேஷம் கொஞ்சக் காலமும் வெள்ளை வேஷ்டிப் பண்டார வேஷம் கொஞ்சக் காலமும் கிரகஸ்த வேஷம் கொஞ்சக் காலமும் சமயத்துக்குத் தக்கமாதிரி உலகம் மயங்குவதற்கும் பணம் பெறுவதற்குமான வேஷங்கள்போடலாம் போலிருக்கிறதே?

மடச்சிஷ்யன்:—முட்டாள் வாயை மூடு. பிராமணன் குருவாக்கை இல்லாமல் காஷாயம் தரித்த ஒரு உதாரணம் எங்கேயாவது கண்டாவது கேட்டாவது இருக்கிறாயா? ஊரிலுள்ளோர் மதி மயங்கிக் காஷாயதாரிக்குப் பணம் வசூலித்துக் கொடுத்துப் பாவ மூட்டையைக் கட்டிக் கொண்டால் உனக்கென்ன? எனக்கென்ன?

சுயம்பாகி:—ஆனால் நாரத பரிவிராஜக உபநிஷத்தில் காஷாயம் தரிப்பதற்குச் சொல்லி யிருக்கிற விதிப்படி செய்யாது காஷாயம் தரிக்கும்போலிச்சந்யாசிகளுக்குக்கூட ரூபாய் கொடுத்து உதவுகிறவன் அவ்வுபநிஷத்தில் சொல்லியிருக்கிற படி நரகத்திற்குப் பாத்திரனாவனே?

மடச்சிஷ்யன்:—அதில் சந்தேகம் என்ன? காஷாயம் என்ற வஸ்திரத்தை மேலேபோட்டுக் கொண்டுள்ள எவனுக்கும் அவன் மடாதிபதியாயிருந்தாலொழியப் பணம் கொடுத்து உதவுபவர்களுக்கு நரகமே பிராப்தியென்று நம் உபநிஷத்துக்கள் கோஷிப்பது உண்மையானால் நமது குருவுக்குக் கொடுப்பவர்களுக்கும் அக்கதியே தான்.

ஒரு நிருபர்.

---

## தனவைசிய ஊழியன்.
## சந்தா விபரம்.

| | |
|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு ... | ரு—0—0 |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குவருஷம்ஒன்றுக்கு | சு—0—0 |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0—உ—0 |

## விளம்பர விபரம்.

| | |
|---|---|
| மாதம் க-க்குபத்தி-க-க்கு ... | உ0—0—0 |
| ஷை அரைப்பத்திக்கு... | கக—0—0 |

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி.

சொ. முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது

